# ஞானபோதினி.

புத்தகம். III { 1900ஸூ ஏப்ரல்மீ 20உ. } நே. 9.


## நக்கீரனார்

## தெய்வப் புலமைமாட்சி

இப்புதுமையைக் கண்டு வியந்து அதனை நோக்கி வைகிய நக்கீரனாரைக் கதுமென ஒரு பெரும்பூதந் தோன்றி, உழைமா னிளங்கன்றைக் கவர்ந்த உழுவைபோலக் கவர்ந்துசென்று ஒரு மலைமுழைஞ்சினுட் புகுத்துத்தாளிட்டுச் சென்றது. செல்ல, அம்மலை முழைஞ்சினுண் முன்னரேயிருந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற் றொன்பதுமக்களும் நக்கீரனாரை நோக்கிச் சொல்வார் 'ஐய! நீ வருதலால் ஆயிரமென்னுந் தொகை நிரம்பியது, இப்பூதம் நீராடச் சென்றது, திரும்பி வந்ததும் நம்மையெல்லாம் ஒருங்கே செகுத்து உண்ணும், நீ வாராவிடில் இவ்விடர் நேராதுகாண்' என்று மிகநொந்து கூறினர். இதுகேட்ட நக்கீரனார் அறிவுமாழ்கிச் சிறிதுமிடர்ப்படாது அவர்க்கு நேரும் ஏதத்தை நீக்குதற்கு முருகக்கடவுள்திருவடித் தாமரைகளை வழுத்தி யாறெழுத்தினையு மோதுவலென்றுதெளிந்து அவ்வாறேயோதித் திருமுருகாற்றுப்படை மொழிந்தார். மொழிதலும் அருள் வள்ளலாகிய அறுமுகக் கடவுள் குறுநகை யிலங்கத்தோன்றி, அணுகிய பூதத்தைக் கதையாலடித்துவீழ்த்தி மலைமுழையிலுள்ளோரை விடுவித்தார். இதன்பின், நக்கீரனார் முருகனைத் தொழுது "மறைமுதல்வ! உமை புதல்வ! ஆலவாயமர்ந்த நீலகண்டனைச் செருக்குறா பகர்ந்தவென் னிழுக்க மொழியக் கயிலைகாணுதி யென்றனன் கண்ணுதல், அண்ணலே! இன்னு மதுகண்டிலேன், இங்கென் விழுமந்தீர்த் ததுகாட்டுதியால்." என்றழுது குறையிரப்பச் செவ்வேளிரங்கிக் "கயிலை யென்று வாளா திசைபுணர்த்தோதாது கூறினனையனிதனால், தென்கயிலையாகிய காளத்தியானுமிந்நோய் தீரும்" என்று நினைந்து நக்கீரனாரை நோக்கி 'இப்பொய்கையில் மூழ்கினாற் கயிலைப்பொருப்பைக் காண்டை' என, அவரு முருகனை யிறைஞ்சி யேத்தி யவ்வாறே யப்பொய்கையின் மூழ்கிட

பொன்முகரி தீர்த்தத்தினெழூங்கார். எழுதலும் மேனிமேற் பர
விய நோயுந்தீர்ந்து முளையில ஞாயிறு விளங்குவதென்ன ஒளி
விரியத்தோன்றிப் பாவிற்பொதிந்து கிடந்தநுண்பொருள்பெற்று
உவந்தான்போலச் சிவபெருமானை நேரிற்கண்டு கைகடலைமேற
கூம்பக் கண்ணீர் முத்தென அரும்ப நாவுரை குழறப் பரவிப்பர
விக் காளத்தியப்பருங் கயிலையப்பரும் வேறென்னுங் கருத்தின்றி
யொற்றுமை கொளுத்திக் 'கயிலைபாதிகாளத்திபாதியந்தாதி' கட்டளை
யிட்டருளினார் நக்கீரனார் என்று விரித்து விளக்கும். இனி,

### திருப்பரங்கிரிப்புராணம்.

தமிழ்க்கடலை யளந்துகொண்ட அறிவின் மாட்சிமைப்பட்ட
நக்கீரனார் பரங்குன்றிற் சரவணப் பூந்தடத்தில் நாடொறுங் குடை
ந்து பூசனைக்கடன் முறைபெறக்கழிப்பிப் பின் மதுராமாநகர்
செல்வார். இனித்தேவரிற் சிறுநுதலம்மை குறுமருங்கமைந்த
மறியமை கையின் மாணிக்க வண்ணனையும், மகரவிற் கயன்மீனு
யர்த்திய வழுதியையுமன்றிப் பிறரொருவனையுஞ் செய்யுளி
லமைத்துப் பாடுவதில்லையென்னும் உறுதிக்கோளுடையார். இவ்
வொழுகலாறுடைய நக்கீரனாரை யொறுத்துத் தான்பாடல்பெறு
வதற்கெண்ணிய முருகக்கடவுள் பரங்குன்றிற் சரவணப்பொய்
கையிலவர் நீராடப்போதும் பொழுதறிந்து தன்பாலுள்ள அண்
டாபரணனை யழைத்து 'நக்கீரனை யொருகுறை யேற்றி நமது
மலையிற் சிறைப்படுத்தி மீளுக' என்று பணித்தார். அப்பணிமேற்
கொண்டோன் போந்து, முறைப்படி பூசனைப் பெரும்பய மாற்றி
யஞ்செழுத் துருவேற்றிக்கொண்டு கரைமருங்கோங்கிய ஆலமர
நிழலில் ஒரு பாறை மீதிருக்கு நக்கீரனாரெதிரில் பொய்கைக்கரை
யில் ஓராலிலையைக்கிள்ளியிட அது கரையிலொருபாதியும் நீரி
லொருபாதியுமாக விழுந்தது. விழுந்த இலையின் கரையிற்படிந்த
ஒருகூறு குருகாயும் நீரிற்படிந்த பிறிதொருகூறு கயலாயும் வடிவு
திரிந்து, இவ்விரண்டும் இருபுறம் பதைப்பது கண்டார். கண்டு
உள்ளம் நைந்து இரங்கி யவற்றினருகிற்போந்து நகத்தாற் கிள்
ளிப் பிரித்து விட, "அவை யிரண்டும் வாயங்காந்து குருதிகான்றி
றந்தன. அக்கணத்தில் 'அண்டாபரணன் அழன்று சீறியெதிர்ந்து
"முருகனுறையு மிக்குன்றிற் கொலைபுரிந்தனை' என்றுரைத்து
வெருவப்பிடித்துச் சென்று குகையினுட் புகுத்துப் பாறை மூடிப்

போயினன். நக்கீரனார் பெரிதும் வருந்தி யிது முருகனைப்பாடாக் குறையென்று அருட்குறிப்பானுணர்ந்து 'உலகம்' என்றெடுத்துக் 'கிழவன்' என்று முடித்துத் திருமுருகாற்றுப் படையருளிச் செய்தார். இனியிதிற் கிழவன் என்று முடித்தமையாற் 'கிழவனைய் வருதற்கு நமக்கு நாட் செல்லும்' என்று கனவினருளிச் செவ்வேள் மறைந்தார். இதனை யுணர்ந்தெழுந்த நக்கீரனார் 'இளையோன்' என முடிக்குஞ் சீரை மாற்றிக்கூறுதலும் திருமுருகன் றோன்றி யவர்க்கு அருணல்கினன் என்று சுருங்கக் கூறும்.

இனியிவைதம்முள் திருவிளையாடற்புராணம், ஆசிரியர் நக்கீரனார் 'கொங்குதேர் வாழ்க்கை' எனுஞ்செய்யுளிற குற்றமாராய்ந்தவாறும், சிவபெருமான் அவரை யொறுத்துணர்த்தியவாறு மாத்திரமே யுரைப்பச்சீகாளத்திப் புராணம் அவர் அச்செய்யுளிற் குற்ற மாராய்ந்தவாறும், அங்ஙன மாராய்தலாற்போந்த பெருங் குற்றங்கடிதற் பொருட்டுக் காயிலைக்குச்செல்லும் வழியில் முருகக் கடவுள் திருவருணோக்கஞ் சித்திக்கப்பெற்றுக் காளத்தி மீண்டு இறைவனைத்தொழுது கிடந்தவாறும் கூறத்திருப்பரங்கிரிப் புராணம் அவர் முருகக்கடவுள் திருவருட்குறிப்பாற் சிறையிடப்பட்டுத்திருமுரு காற்றுப்படை யியற்றியுய்ந்தவாறு மாத்திரமேயோதியொழிதன் மேற்கிளந்து கூறிய மூன்று வரலாற்றையும் உய்த்து நோக்குவார்க்கு இனிது விளங்கும். இனியிம்மூவகை வரலாற்றுள்ளும், திருவிளையாடற்புராண முடையார் தன் மனைவி குழன் மணத்தை வியந்து கொண்ட பாண்டியன் வங்கிய சூடாமணி யென்னுஞ்சண்பக மாறனென்பர், சீகாளத்தி புராணமுடையார் வறிதே பாண்டியனென்று கூறி யொழிந்தார்; திருப்பரங்கிரிப்புராணமுடையார் அவ்வரலாற்றை முழுவதுமே கூறாதொழிந்தார். புறநானூறு முதலிய தொகைநிலைச் செய்யுட்களை யுற்றுணர்வார்க்கு வங்கிய சூடாமணி சண்பகமாறன் எனும் பெயர்கள் புதுமை யுடையனவாய்த் தோன்றும். பழைய தமிழ் வேந்தர்க்கும் மக்களுக்கும் இடப்பட்டு வழங்கிய பெயர்கள் செவ்விய தமிழ்ச்சொற்களாகவாதல், வடசொற்கள் விரவினும் அவை தமிழ்ச்சொற்போல மெல்லென்றிசைக்கும் மாட்சியுடையவாகவாதல் நிகழுந் தன்மையவாம்; 'பாண்டியன் அறிவுடை நம்பி,' 'நெடுஞ்செழியன்' 'உக்கிரப்பெருவழுதி,' 'மாவளத்தான்,' 'வேப்பஃறடக்

கைப்பெரு நற்கிள்ளி,' 'இளஞ்சேட்சென்னி', 'சேரமானமாமவண் கோ,' 'யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும் பொறை,' 'உதி யஞ் சேரலாதன்,' 'இடைக்காடனார்,' 'ஒக்கூர்மாசாத்தனார்', 'கண்ணகனார்', 'கயமனார்' என்றற் றொடக்கத்துப் பெயர்களே பிதனையினிது நிறுத்துக்கூரிபோக்கு மென்பது. இனித்தமிழிற்றிரு விளையாடற்புராண மியற்றிய ஆசிரியர் இவ்வரலாறுகளைப் பன் முறையாய்ந்து பொருந்தக் கூறுமாறின்றி வடநூலிற் கிடந்தவா றே யெடுத்துத்தமிழில் மொழி பெயர்த்திட்டார். வடநூலாசிரி யர் பெரும்பாலும் ஒரு நூலியற்றப் புகுந்துழி உலக வழக்கொ டும் ஆன்றோர் வழக்கொடும் மாறுபடாவாறு வரலாற்று முறை மையை யுணர்ந்து ஆய்ந்து பொருந்தக் கூறுவதின்றித் தாந்தாங் கண்டவாறே யொன்றும் பலவு மெடுத்துக்கொண்டு அவற்றை மாற்றியுங் குறைத்தும் வேறு பலவற்றை யிடையிற்புகுத்தி விரித் தும் உண்மை தோன்றுவாறு பலபடக்கூறுவர். இவ்வாறியற்றிய நூற்பொருளியல் பறியாதாரதனையே முதனூலாகக் கொண் டுவழி நூலியற்றுவர். அங்ஙனமியற்றும்வழியவ்வழிநூலும்அதனுற்பழுது படுமா மென்பது. இனி வடநூற்பொருளைத் தழுவாது செந்தமிழ் நூலியற்றிய தொல்லாசிரிய ரெல்லாரும் உள் பொருளைக்கிடந்தவா றெடுத்துண்மை தோன்ற உரிமையின் விளக்கி யுயர்ந்தாரென்பது சிலப்பதிகாரம் பெரியபுராணம் முதலிய பழைய தமிழ் நூல்களா லுணர்ந்து கொள்க. வடநூலாசிரியர் தம்பாடை மேற் சென்ற கடும்பற்றுள்ளத்தாற் றமிழில் வழங்கியமக்க ளியற்பெயர்களையும் வடசொல்லாற் றிரித்துக்கூறுதலிற் 'சண்பகமாறன்' 'வங்கியசூடா மணி' எனும் இயற்பெயர்கள் தமிழ்ச்சொற்களாய்த்தமிழில் வழங் கியவா றொருவாற்றானும் புலப்படவில்லை. அல்லதூஉம், வடநூற் றிருவிளையாடற் புராணமுடையார் தாமே படைத்திட்டுக்கொண் டெழுதியனவோவென்று எண்ணுதற்கும் இடஞ்செய்து கிடக்கும். என்னை? ஒருவரியற்பெயரைக் கூறப்புகுந்தார்க்குப் பாடை வேற் றுமைபற்றி யதனையுந் தம்பாடையில் மொழிபெயர்த்துக்கோடல் பெரிதும் இழுக்காய் முடிதலானும், இயற்பெயரைக் கிடந்தவாறே கூறுதலாற்போந்த வழுவின்மையின் அதனை யுள்ளவாறே யுணர்ந் தார் இயற்பெயரைக் கிளந்தோதுவராதலானுமென்பது. இனிச் சீகாளத்திப்புராணமுடையார் தாமாராய்ந்தும் பெறப்படாத இயற்

...பயனை வடமொழியிற் கிடந்தவாறே கூறுதொழிதல் பெரிதும் ...ன்கு மதிக்கப்படுவ தொன்றாமென்பது.

இனிக் கதைவரலாறும் ஒன்றோடொன்று மலைவு படுமாறு ...ாட்டுதும்:—திருவிளையாடற் புராணமுடையார் பாண்டியன் இள ...வனிற்காலத் தொருநா ளிளமரக்காவிற் புகுந்து தன் மனைவி ...யொடு வைகினனெனக் கூறினார்; சீகாளத்திப் புராணமுடையார் ...ாண்டியன் தன்மாளிகை மேனிலைமேல் தன்மனைவியோ டிருந்தா ...னென்றார்; அவர், தாய்தந்தையரை யிளம்பருவத்தே யிழந்ததரு ...மியென்னும் மறைச்சிறுவன் தான் மணம்புரிதற்குப் பொருள்வே ...ண்டி யிறைவனை யிரந்தானென்றார்; இவர், பாண்டிநாட்டில் மழை வறங்கூர்ந்து வற்கடகால மிகத்தான் வறுமையால் நலிந்து வேறு ...ாடு போதற் சென்னித் தருமியென்பவன் இறைவனை விடைகே ...ட்ப இறைவனிரங்கிச் செய்யுள் கொடுத்தான் என்றார்; அவர், செய்யுள் பெற்றதருமி யதனை முதலிற் சங்கப் புலவர்க்குக் காட்ட அவர் நல்ல வென்று வியந்து பாண்டியனுக்குச் சென்றுரைப்ப அவனுமகிழ்ந்து தருமிக்குப் பொற்கிழி யறுத்துக்கொள்ளப் பணிப்ப அவ்வாறே போந்து தருமி யறுக்கப் புகுங்கால் நக்கீரனார் மறுத்தார் என்பர்; இவர், அதனைப்பெற்ற தருமி முதலிற் பாண்டியனிடத்திற் சென்று காட்ட அவனுவந்து மற்றிதனைச் சங்கப் புலவர்க்கு ஏற்பித்துரைத்திரென அவ்வாறே யவரும் போந்து சொல்லக்கேட்ட புலவருள் நக்கீரனாரிது குற்றமுடைத்தென்றார் என்று கூறினார்; அவர், இறைவன் புலவனாய்த்தோன்றி நீர் வழிபடும் ஞானப்பூங்கோதையார் கூந்தலு மத்தகையதோ வென்று வினாயினார் என்றார்; இவர், வாளா இறைவி கூந்தலும் அத்தன்மையதோ வென்றாரென்றார்; அவர், இறைவன் பிறந்த நுதல்விழி வெப்பம் பொறுது நக்கீரனார் பொற்றாமரைக் குளத்தில் வீழ்ந்தார் என்றார்; இவர், இறைவன் நக்கீரனாரைக் குட்டநோய் கொள்கவென அதனை யஞ்சித்தொழுத நக்கீரனாரைக் கயிலைகாணிலிது தீருமென்று கூறி மறைந்தான் என்றார். இனிச் சீகாளத்திப் புராணமுடையாரும் திருப்பரங்கிரிப் புராணமுடையாரும் தம்முண் மாறுகொண் டுரைக்குமாறு காட்டுதும். சீகாளத்திப் புராணமுடையார், நக்கீரனார் கயிலைகண்டு தொழுதற் கெண்ணித் திருக்கேதாரமுதலிய வடநாட்டுத் தலங்களைக் கடந்து செல்வுழிச்

செல்லு நெறியில் ஒரு குளமும் அதன்கரையிற் செவ்விய ஓர் ஆல மரமும் நிற்பக்கண்டு அதன் நிழலிற் சிறிதிளைப்பாறி யிருப்ப அம் மரத்தின் இலை புதிர்வையே தலைக்கீடாகக் கொண்டு ஒருபூதம் அவரை ஒரு மலைக்குகையிற் புகுத்த ஆண்டுத் தனக்கு முன்னிருந்தவரைக்கண்டிரங்கி யவர்பொருட்டுத் திருமுருகாற்றுப்படை மொழிந்து எல்லாரையும் உய்யக்கொண்டாரென்பர்; திருப்பரங்கிரிப்புராணமுடையார், நாடோறும் பரங்குன்றிற் சுனையில் நாட்கடன்கழித்துத் தன்னைத் தொழாது செல்லும் நக்கீரனரைப் பரங்குன்றின் முழையிற் சிறைப் புகுத்திப்பின் ஆற்றுப்படை பாடுவித்தார் முருகக்கடவுள் என்பர்.

இனி யிவற்றுட் பாண்டியன் றன்மனைவியொடு வைகியவாற்றை இடமாத்திரையா னிருவரும் வேறுபடுத்துக் கூறுதலினது பெரியதொரு வேற்றுமை யாகாதென்பது. இனி இறைவன்மாட்டு அன்பு முதிர்ந்து பொருண்மேற் சென்ற பற்றைத் துவரத்துறந்து கரணங்க டுபவாகி யவ்விறைவ னருள்வழி நிற்குந் திருத்தொண்டர் இறைவனை எமக்கு மனைவிவேண்டும், பொருள்வேண்டுமென்று குறையிரந்து கொள்ளாது தங்குறையை யறிவித்தன் மாத்திரையி னமைந்தொழுந் தன்மைய ராகலாற் றிருவிளையாடற் புராணமுடையார் இறைவனிடத் துரிமை யன்பு முறையுளி நிகழ்த்துந்தருமி யென்பவன் முன்சென் றிறைவனை வதுவையயர்தற்பொருட்டுப் பொருடரல்வேண்டு மெனக் குறையிரந்தானகக் கூறுதல் பொருத்தமின்றாம். இனிப் பாண்டிநாடு முழுவதூஉம் மாரிவறப்ப வளஞ் சுரவாது யாண்டும் வறுமைமிகுந்து மாவுமக்களும் பெரியதோ ரிடருழந்தா ரென்று அதனைத்தாம் நேரிற்கண்டிருந்த மதுரைக் கூலவாணிகன் சாத்தனர் * "பன்னீராண்டு பாண்டி நன்னாடு, மன்னுயிர் மடிய மழைவள மிழந்தது" என்று நிலையிட்டுரைத்தலானும், இறையனாரகப் பொருளுரைப் பாயிரத்தினும் இவ்வாறே கூறப்படுதலானும் அறிவுடை நன்மக்களெல்லாரும் இவ்வற்கடகால நிகழ்ச்சியைத் தழீஇக்கொண்டு மொழிதலானும், சீகாளத்திப் புராணமுடையார் அவ்வற்கடகாலத்தின் வறுமைநோய்பொறுக்கலாற்றாது தருமி யென்பவர் வேறு நாடு போதற்கு விடை பெறுதல் வேண்டி யிறைவனைக் குறையிரந்தா ரென்றல் உலக வழக்கொடும் புலனெறி வழக்கொடுந் திறம்பாத மெய்

* மணிமேகலை, பாத்திரமரபு கூறியகாதை.

யுரையாம். அல்லதூஉம், தருமி யென்பவர் இறைவனை மனைவி வேண்டும் பொருள் வேண்டு மெனக்குறையிரவாது, வறுமை நோய்களைந்துகோடன் மாத்திரையே குறித்திறைவனை வேண்டினாராகக்கூறும் சீகாளத்திப் புராணமுடையார்கூற்றுப்பெரிதும் நன்கு மதிக்கப்படுவதொன்றாம்; இவர் இவ்வரலாற்றின் மெய்ம்மை யாராய்ந்துணர்ந்து கூறினாரென்பது சடைப்பிடிக்க. இறைவன்றந்த செய்யுளைக்கொண்டு போந்து தருமி யென்னு மறைச் சிறுவன் சங்கப்புலவர்க்குக் காட்டியவழி ஆங்கே நக்கீரனாரதைக் குற்ற முடைத்தென இயம்பாது சங்கப்புலவர் அச்செய்யுளை வியந்து கொண்டுபோய்ப் பாண்டியனுக்குரைப்ப அவனும் உவகைமிக்குப் பொற்கிழி பெறுக வென்ற சொற்படி தருமி கிழியறுக்கப்புகுந்தவழி யாண்டு அதற்குக்குற்றங் கூறினாரென்றல் ஒரு சிறிதும் பொருந்தாமையான், திருவிளையாடற் புராணமுடையார் கூற்று ஆன்றோர் வழக்கொடு மாறு கொள்ளும். மற்றுச்சீகாளத்திப் புராணமுடையார், செய்யுள் பெற்றுக்கொண்ட தருமி யதனை முதலிற் பாண்டியனுக்குச் சென்று காட்ட அவன் உவந்து இதனைச் சங்கப்புலவர்க் கேற்பித்துப்பின் பொற் கிழிபெறுகவென்று கூறினனென்றும், அவ்வாறே யவர் சென்று அதனையுரைப்ப அப்போது நக்கீரனார் குற்றங் கூறினாரென்றும் உலகவழக்கொடும் ஆன்றோரொழுக்கத்தொடும் மாறுகொள்ளாவா றோதுதலின் இஃதுண்மை நிறுத்தும் பொன் மொழியாமென்பது. இனியிறைவன்புலவனாய்ப்போந்து நக்கீரனை நோக்கி பிறுதியில் ஞானப் பூங்கோதையார் குழலு மந்நீர்மையதோ வென வினாயினாராகக்கூறும் திருவிளையாடற் புராணமுடையார் கூற்று இறைவி கூந்தலுமத்தன்மையதோ வென வினாயினாராகக் கூறும் சீகாளத்திப்புராணமுடையார் கூற்றினுஞ்சிறக்குமாம். என்னை, பொதுப்பட இறைவி கூந்தலை யெடுத்துக்கூறுதலாற் 'கைலை பாதிகாளத்தி பாதியந்தாதி' பாடுதற்குக்காரணம் பிறிதொன்றாற் பெறப்படாமையானென்பது. இனித்திருவிளையாடற் புராணமுடையார் இறைவன்றிறந்த நுதல்விழி வெப்பம் பொறாது நக்கீரனார் பொற்றாமரையில் விழுந்தார் என்பதூஉம், சீகாளத்திப் புராணமுடையார் இறைவன் அவரைக்குட்ட நோய் கொள்க வெனக் கூறினனென்பதூஉம் மாறுபடாவாம்.

என்னை? நுதல்விழி திறந்தவளவில தம் மெய்யில் வெம்மைமிகப் பொறுக்கலாற்றாக் கொடுந்துயர் விளைதலின், மற்றதனைப் பரிகரித்துக் கோடற்பொருட்டுப் பொற்றாமரைத் தடத்தில்வீழ்ந்து, பின் இறைவனருள் சிறிது முகிழ்த்தலின் அதனை நீங்கி வெளிப்பட்ட நக்கீரனார்க்கு முன்பற்றிய வெம்மையால் மெய்ந்நிலைமாறுபட்டுத் தொழுநோய் முதிர்ந்ததென்பது கருத்தாவினென்க. இனி, நக்கீரனார் கயிலைகாணச் செல்லும் நெறியிற் பூதத்தினாற் கவரப்பட்டுத் திருமுருகாற்றுப்படைமொழிந்து உய்ந்தாரெனக் கூறும் சீகாளத்திப்புராணமுடையார் கூற்றுமெய்ப்பொருள் நிலையிட்டுரைக்கும் அறிவுடை நன்மொழியாமென்பது. இவ்வாறன்றிப் பரங்குன்றில், முருகக்கடவுள் பாமாலை பெறுதற்கெண்ணி யொருகாரணங்காட்டியவரை மலைமுழையிற் புகுத்திச்செய்யுள் கொண்டு பின் அவரைச் சிறைவீடு செய்து அருள்புரிந்தாரெனக் கூறும் திருப்பரங்கிரிப் புராண முடையார் கூற்று உலகநெறியொடு மாறுகொண்டு இயற்கையின் நடவாச்செயற்கைத் திறத்தைப் புனைந்தெடுத்துக் கூறுதலானும், அதனால் தாம் பாமாலைபெறுதற் கெண்ணுதலின் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமும் நடுநிலைதிரிந்து பொருத்தமில் காரணத்தாற் சிறைபுகுத்தலிற் சமனிலை வழுவுதலென்னுங் குற்றமு மிறைவன்மாட்டெய்துதலானும், இனி, நக்கீரர்தாமு முருகக்கடவுளிடத் தெழுந்த அன்பினாற் செய்யுள்செய்யாது அச்சம்பற்றிச் செய்தாரெனவும், சிவபெருமானையே பாடும் வழுவாநோன்புடைய ராயின் அந்நோன்போடிகலிப்பின் முருகனைப்பாடினாரெனவும், முருகக்கடவுள் தாமுந் தம்மாற் றொழப்படுந்தன்மையரல்ல ரென்றெண்ணினாரெனின் அது நூலுணர்வும் மெய்யுணர்வுமின்றி முருகனையும் மூத்த பிள்ளையாரையும் உமாதேவியாரையும் இறைவனொருவனே கொண்டபலவேறுபட்ட அருட்கோலங்களாமென்று மறைமொழிகிளந்த மந்திரவுரையொடு முரணியக்கோலங்கடம்முள் வேறுபாடு கற்பித்துக்கொண்டொழுகுந் தெரிவின்மாந்தரொழுக்கத்தொடுபட்டுச் சிறுமையெய்தினா ரெனவுங்கொள்ளக்கிடக்குமாதலானும் அவருரைபொருந்தா தென்பதும் அறிவுடையாரெல்லார்க்கு மினிது விளங்குமென்பது. இனித்திருமுருகாற்றுப்படையில் அஃதியற்றப்பட்ட வரலாறு யாண்டுங் காணப்படாது.

நாகபட்டினம் - வேதாசலம்பிள்ளை.

# தேசாபிமானி.

## கதைவரலாறு.

அநேக நூற்றாண்டுகளுக்குமுன் நமது இந்துதேசம் சுதேச இராஜாக்களால் ஆளப்பட்டுவந்தது. அக்காலத்தில் மேற்கே வெகுதூரத்துக்கப்பால் ரோமாபுரி என்கிற இராஜ்ஜியம் வெகு பிரசித்தி பெற்றிருந்தது. ரோமுக்கு முன்னால் கிரேக்கு தேசமானது வெகு பலப்பட்டிருந்தது. சிற்பசாஸ்திரம் முதலிய நாகரீகவித்தைகளில் கிரேக்கர் மிகத் தேர்ச்சியடைந்திருந்தார்கள். நமது முன்னோர் எவ்வாறு வேதாந்தத்திற் பேர்பெற்றிருந்தார்களோ கிரேகர் நாகரீகவித்தைகளில் எவ்வாறு பிரசித்திபடைந்திருந்தார்களோ அவ்வாறே ரோமரும் இராஜநீதிகளிலும் இராஜதந்திரங்களிலும் விசேஷ ஞானம் பெற்றிருந்தார்கள். ரோமாபுரியென்பது ஐரோப்பா என்றுசொல்லப்படும் கண்டத்தின் தென்பாகத்திலுள்ள இடலிதேசத்தின் மேற்கரையிற் கடற்கரைக்குச் சுமார் 20-மைல் தூரத்தில் டைபர் நதிக்கரையில் * ஏழுமலைகளின்பேரிலுள்ள ஒருபட்டணம். இந்தபட்டணம் ஆதியில் ரோமுலஸ் என்பவனாலுண்டாக்கப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. பிறகு அவருக்குப்பின்னாற் பல ராஜவம்சங்களுண்டாய்க் கடைசியாக டார்குவின் என்னும் வம்சத்தார் ஆளுகையில் அவர்களில் ஒருவன் ஒரு பிரபுவின் மனைவி கற்பைப் பலாத்காரத்தால் அழிக்கக் குடிகள் வெகுண்டு இராஜங்கத்தாரைத் தூரத்திவிட்டு ஸெனேட் என்னும் ஒரு ஸபைசேர்த்து அச்சபையாரால் வருஷாவருஷம் கான்ஸல் என்னும் ஓர் அதிகாரியைத்தெரிந்தெடுத்து அவருக்கு ஒருவருஷம்வரையில் சர்வாதிகாரத்தையும் கொடுத்துத் தாங்களே ஆளத்தலைப்பட்டனர். பிரபுக்கள் தாங்களே இராஜாங்கத்திலுள்ள எல்லா அதிகாரத்தையும் வகித்துக்கொண்டமையால் அவர்களுக்கும் குடிகளுக்கும் பல தடவைகளில் சச்சரவுகள் உண்டாய் பிரபுக்கள் கொஞ்சங் கொஞ்சமாகக் குடிகளுக்குத் தங்கள் அதிகார பாத்தியதையைப்பகிர்ந்து—விசேஷ அதிகாரமும் தன் அதிகாரத்தை மீறி ஒரு காரியமும் நடக்கக்கூடாததுமான—டிரிபூன் என்னும் ஒருபிரதிநிதியை ஏற்படுத்திக்கொடுத்தனர். இஃது இவ்வாறிருக்க ரோம்பட்டணமானது சுற்றிலுமுள்ள பட்டணங்களையெல்லாம் ஜெயித்து நாளுக்குநாள் விருத்தியாகி இடையிலுள்ள மற்றநாடுகள் முழுமையும் கவர்ந்தது. இவ்வாறாகவே பட்டணவாசிகளென்றும் நாட்டாரென்றும் ஜனங்களில் பேதம் உண்டாய்ப் பட்டணவாசிகள் தங்கள் அதிகார பாத்தியதையை நாட்டாருக்குக் கொடுக்கச்சம்மதமின்றி வெகு சண்டைகளும் குழப்பங்களுமுண்டாயின.

---

* ஏழுமலையாவன—காபிடொலைன், பெலடைன், அவண்டைன், கொய்ஹனல், யஸர்யூனேல், விமினல், சுவிரினல்,

ரோமும் இடலியேயன்றி ஐரோப்பா கண்டத்தைச்சேர்ந்த விசேஷநாடுகளையும் ஆப்பிரிக்காவின் வடபாகத்தையும் ஜெயித்து ஆசியா கண்டத்தின் மேற்பாகத்திலும் தன் நாகரீகமும் அதிகாரமும் பரவச்செய்தது.

இவ்வித வெற்றிகளுக்கு நன்றுய்த் தேர்ச்சி பெற்ற சேனைகள் திரளாய் வேண்டியும், அதுபற்றி அதை நடத்தச் சேனைத்தலைவர் வேண்டியும், அவர் வசத்தில் அச்சேனைகளை நிலையாக ஒருவருஷமாவது வைப்பது அவசியமாயிற்று. அதுபற்றிச் சேனைகளுக்குத் தமது தலைவரிடத்திலேயே பற்றுண்டாய்ப் பட்டணவாசிகளை லக்ஷியம் செய்யாமல் அவை தமது தலைவர் சொற்படியே நடந்தன. இச்சேனைத் தலைவரே எல்லா அதிகாரங்களையும் கவர்ந்து சக்கிரவர்த்தி என்று பட்டப்பெயர் பெற்றனர். அவர் ஆளுகையில் ஸெனேட் என்று சொல்லப்படும் ராஜசபையும் கான்ஸல் என்று சொல்லப்படும் அரசின் தலைமை அதிகாரமும் டிரிப்யூன் என்று சொல்லப்படும் குடிகளின் பிரதிநிதித்துவமும் தமது அதிகாரத்தை யிழந்து பேருக்கே யிருந்தன. சக்கிரவர்த்தி அதிகாரம் நாடு முழுமையும் செல்லச் செல்ல அனைவரும் அவர் கீழ் ஏற்றத்தாழ்வின்றிச் சமமாயினர். சட்டங்கள் ஏற்பட்டு அச்சட்டத்துக்குச் சக்கிரவர்த்திதவிர மற்றவர்கள் அடங்கியவராயினர். இம்மாதிரி நான்கு நூற்றுண்டாயினதும் கான்ஸ்டைண்டன் என்னும் மகா சக்கிரவர்த்தி ரோமாபுரியை விட்டுக்கிழக்கே கருங்கடலுக்கும் மார்மோராக் கடலுக்கும் இடையில் வசதியான துறைமுகத்தில் தன்பெயரால் கான்ஸ்டாண்டிநோபில் என்னும் நகரம் உண்டாக்கி அதையேதான் ராஜதானியாக்கிக் கொண்டனன். இக்காலத்திற் கிறிஸ்து மதமானது உண்டாய்க் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பரவிக் கொண்டிருந்தது. முன்னிருந்த சக்கிரவர்த்திக ளெல்லாம் அதற்குத்தங்களா லானவரையில் இடுக்கண் செய்தும் அஃது அழியாமற் செழித்துக்கொண்டே வந்தது. கான்ஸ்டன்டைன் தானே கிறிஸ்துமதத்தைத் தழுவவும் கிறிஸ்து மதம் இராஜ்ஜியம் முழுமையும் பரவியது. கிறிஸ்து மதம் எங்கும் பரவியதனால் அதிலேயும் அதிகாரமும் ஒழுங்கும் வேண்டியதாயிருந்தது. இராஜாங்கத்திற் பல அதிகாரிகள் இருந்ததுபோலவே மதத்திலும் பல அதிகாரங்கள் ஏற்பாடாயின. ரோமாபுரியில் ஒரு போப்பும் (மதத்தின் தலைமை அதிகாரி) கான்ஸ்டாண்டிநோபிலில் ஒரு போப்பும் (பேட்ரியார்க்கு) ஏற்பட்டனர்.

ஒரு சக்கிரவர்த்திக்கு 2-குமாரர்களாக ஒருவன் கிழக்கே கான்ஸ்டாண்டிநோபிலிலும் மற்றவன் மேற்கே ரோமிலும் அரசாண்டான். ரோம் அரசாட்சியானது வம்சத்தாரை விட்டு மிலேச்சர் கைவசப்பட்டுக் கடைசியாகக் கி. பி. 475-ஆம் வருஷத்தில் அரசேயில்லாமற் போய்விட்டது; கடைசியில் ஓர் அரசாட்சி போதுமென்று பேருக்குமாத்திரம் ரோம் கீழ்நாட்டுக் குட்பட்டிருந்தது. ரோமிலுள்ள போப் சக்கிரவர்த்திக்குச் சமீபத்திலில்லாததனால்

சக்கிரவர்த்தியின் அதிகாரத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகத் தானே யடைந்து கடைசியாக 9-ஆம் நூற்றூண்டில் டியூடன் என்கிற ஜர்மனியிலிருந்த பிலேச்ச சக்கிரவர்த்திக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தான். ஆகையால் அது முதல் ரோமிலுள்ள போப்பாகிய மதகுருவுக்கு இச்சக்கிர வர்த்தி ஒருவாறு அடங்கினவனுன். பிரான்சு, ஸ்பெயின், ஜர்மனி, இடலி முதலிய மேல் நாடுகளெல்லாம் இச்சக்கிரவர்த்திக்கு அடங்கியவை யாயின. ஒவ்வொரு சக்கிரவர்த்தியும் பட்டாபிஷேகம் போப்பைக் கொண்டே செய்ய வேண்டி யிருத்தலால் போப்பின் அதிகாரம் அளவற்றனவாயின, ஓர் அரசனைப் புதிதாய் ஏற்படுத்தவும் ஓர் அரசனை அரசினின்று தள்ளவும் வல்லவனுயினுன். டியூடன் சக்கிரவர்த்திகள் தங்கள் தேசமாகிய ஜர்மனியிலேயே இருந்தார்கள். பட்டாபிஷேக காலத்தில் மாத்திரம் ரோமுக்குப்போய் உடனே திரும்பி விடுவார்கள். ஆகவே ரோமில் போப்பைத்தவிர வேறு யாரும் குடிகளை அடக்குவாரிலர். அநேக பிரபுக்கள் உண்டாய் ஒவ்வொருவரும் தமது வீட்டைக் கோட்டையாகக் கட்டிக்கொண்டு தகுந்த அரணுடிருந்து குடிகளை வருத்தியும் தாங்கள் ஒருவரோடொருவர் சச்சரவு செய்து கொண்டுமிருந்தனர். தம்மாலியன்ற மட்டும் இவர்களை யடக்கப் போப்பன்முறை முயற்சிசெய்தும் அவை பயன்படாதுபோயின. கடைசியிற் பிரஞ்சுக்காரனுகிய ஒருபோப் பட்டத்துக்கு வந்ததும் ரோமைவிட்டுத் தன்தேசத்தில் அவிக்கினன் என்னுமிடத்திற் போய்ச் சேர்ந்து அங்கேயே யிருந்தான். ரோமாபுரியில் நடுத்தெருவில் நண்பகலில் உயிருக்கும் சொத்துக்கும் மிக்க பயமுண்டாயிருந்தது.]

## அத்தியாயம் - 1.

வேனிற் காலத்தில் ஒருநாள் சாயங்காலம் சிறுவர் இருவர் அவண்டைன் மலையடிவாரத்தில் டைபர் நதிக்கரையோரமாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் சென்றபாதை விசேஷ நடமாட்ட மில்லாமலும் ஊருக்குச் சற்றே புறம்பாயுமிருந்தது. கொஞ்சதூரத்துக் கப்பால் யாதோர் ஒழுங்கு மின்றி இங்கு மங்கும் சிறுகுடிசைகளும் அவைகளினிடையில் ஒவ்வொருபிரபுவின் கோட்டை கொத்தளங்களோடுகூடிய கோபுரங்களுங் காணப்பட்டன. நதியின் ஒரு பக்கத்திற் செம்படவர் குடிசைகளும் அவைகளுக்கப்பாற் கோட்டைகளும், ஸ்தம்பங்களும் ஸ்தூபிகளும் நிறைந்த ஆலயங்களும், உள்ள ஜெனிகுலம் என்னும் பர்வதம் தோன்றிற்று. மற்றொரு புறத்தில் முன் குடி பெருத்து இப்போது குடிகளின்றிப் பாழாய்ப்போன அவண்டைன் மலையானது அநேக மடங்களோடு கூடிவிளங்கிற்று. அம்மடங்களின் கோயிலில் அடிக்கும் மணிச் சத்தமானது காதுக்கினிமையாக ஆற்றங்கரையில் முழங்கிக் கொண்டிருந்தது.

சிறுவர்கள் இருவரில் மூத்தவனுக்கு வயது சுமார் இருபது இருக்கும். நெட்டையாய் அதிக காம்பீரத்தோற்றத்தையு வடையன். அக்காலத்தில்

மடத்திலே தான் வெகு சிரமத்துடன் சிறிது கல்வி கற்பது வழக்கம். அவ்வாறு கற்கும் மாணுக்கர் சாதாரண ஜனங்களைப்போலாது சாம்பல்வர்ணமாயுள்ள ஒருநெடுஞ் சட்டையைத் தரித்துவந்தார்கள். அவர்களைப் போலத் தாழ்ந்த உடுப்பேதரித்திருந்தானென்ருலும் அவன் தோற்றம் மிகக்கண்ணியமாயிருந்தது. அவன்முகம் வெகு அழகாயும் மலர்ச்சியாயும் இருந்ததென்ருலும் ஏதோ அவன் ஆழ்ந்த யோசனையில் மூழ்கினுன் என்னும்படி தோன்றிற்று. அவன் அதனுல் நிகழ்காலசம்பவங்களைவிடப் பூர்வசரித்திரங்களிலும் இனி நடக்கப்போகும் விஷயங்களிலும் பிரியமுள்ளவனுகக் காணப்பட்டான்.

இளையவனே மிக்க அமைதியும் இனிமையுமுள்ள தோற்றத்தையுடையவன். தமயன்சொல்வதை அவன் மிக்க ஆவலோடு கேட்பதை நோக்கின் மாதர்க்குரிய இனியகுணங்கள் அவனிடத்தில் உள்ளனபோலும். தாழ்ந்த உடையைத் தரித்திருந்தான் என்ருலும் அது சுத்தமாயிருந்தது. அவன் தலைக் குல்லாவினின்றும் வெளிவந்து தோள்வரையில் தொங்கிய சீவிக்கோதிவிட்ட மயிர்ச்சுருளை நோக்கின் பிரியமான அன்னையின் பெருமை விளங்கும்,

இருவரும் நதிக்கரையோரமாக ஒருவர்தோளில் மற்ருெருவர் கைபோட்டுக்கொண்டு நடந்து செல்லுகையில் அவர்கள் தோற்றமும் இளமையும் ஒருவர்மேலொருவருக்குள்ள வாஞ்சையும் கண்கவர் வனப்பாயிருந்தது.

"என் தம்பி, இந்தச் சாயங்காலவேளைதான் என் மனதுக்கு நிரம்ப ரம்மியமாயிருக்கிறது. நீ ஒருவன்தான் ஆகாசக்கோட்டை கட்டும் என்மனோராஜ்ஜியங்களையெல்லாங் கனவாக எண்ணுமல் நினைவாக வெண்ணுகிருய்; நமது தந்தையோ நான் ஏதோ நல்ல விஷயங்களைப் புத்தகங்களினின்றுங் கூறுவதாக எண்ணுகிருர்; தாயோ, தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு "எவ்வளவு படித்திருக்கிருன் பிள்ளை பார்த்தாயா" என்கிருள்; மடாதிபதிகளோரோம் மறுபடியும் இந்தஸ்திதியிலிருக்கவேண்டும்" என்று நான் கூறும் போதெல்லாம் வேதவாக்கிய விரோதமாய்ச் சொல்வதாக நினைக்கிருர்கள். நீயோ என்னைப்போலப் படித்திராவிட்டாலும் என்மனோராஜ்ஜியங்களிலும் வீண் எண்ணங்களிலும் கலந்துபேசுவதனுல் எனக்கு ஊக்கத்தையும் மனக்கிளர்ச்சியையும் உண்டாக்குகிருய். இதனுல் ஒவ்வொரு சமயத்தில் நமது பிறப்புவளர்ப்பை மறந்து டியூடன் சக்கிரவர்த்தியின் இரத்தந்தான் நமது தேகத்தில் ஓடுகின்றதோ என்று ஊகிக்கிறேன்" என்ருன் கோலா என்னும் மூத்தவன்

"என் அருமைக்கோலாவே, தெய்வம் நம்மைச் சூதுபண்ணிவிட்டது. உனக்கோ, நமது தந்தையின் ராஜகம்பீரத்தைக்கொடுத்தது; எனக்கோ, நமது தாயின் சாந்தகுணத்தைத்தந்தது".

"அப்படியாயின் நீயே மேம்பட்டவனுவாய்; ஏனெனில், நான்மிலேச்ச வம்சத்தனுகிறேன் ; நீயோ ரோமனுவாய், சாதாரண ரோமன் வடக்கு அரசனைவிட விசேஷமாக மதிக்கப்பட்டகாலமு மிருந்தது. இருக்கட்டும், நமது வாழ்நாளிலேயே விசேஷமாறுதலைக்காணலாம்".

"நான்காண நீநல்ல ஸ்திதிக்குவந்தால் அதுவே எனக்குத் திருப்தி ; இப்போதே உன்னை எல்லாரும் மகாவித்துவா னென்கிருர்கள். உன்னைக் கோலன்னு வம்சத்தார் உபசரித் தழைப்பதைக் கேட்கும்போதெல்லாம், தாயார் 'நீ நல்லபதவிக்கு வருவாய்' என்று கூறுகிருள்" என்ருன் இளையோன்.

"கோலன்னுவா ! வீண் டம்பாசாரிகள்; தாங்கள் நிரம்பப்படித்தவர் போலவும் படித்தவரை ஆதரிப்பார்போலவும் நடிக்கின்றனர். அவர்கள் என்னை உபசரிப்பதெல்லாம் எல்லாரும் என்னை வித்துவான் என்பதனுலும், அவர்களிடத்திலேயேயுள்ள விதூஷகர்களைவிடச் சாதுரியமாய் நான் வசனிப்பதனுலேயுமே. ஆமாம்; அவர்களால் என் அந்தஸ்து உயரும் ; எவ்வாறு என்பாயோ - நெஞ்சுலர்ந்து பட்டினிகிடக்கும் நமது குடிகளைவருத்தி அவர்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த திரவியத்தை அவர்களினின்றுந் தாக்ஷிணியமின்றிக் கொள்ளைகொள்ள ஓர் உத்தியோகமளிப்பர். குடிகளிடத்தில் ஈவிரக்க மில்லாதவர்கள், குடிகளிடத்திற் பச்சாத்தாபப்படுகிற எவனையாவது எக்காலத்திலாவது உயர்த்தியிருக்கிருர்களா? இல்லை. நான் நல்லபதவிக்கு வந்தால் என்னைப்போலுள்ள தாழ்ந்த குடிகளால் உயர்த்தப்பட வேண்டுமேயொழிய இந்தப் பிரபுக்களின் உதவியால் உயர்ந்த பதவிக்குவர யான் ஒருபோதும் சம்மதியேன்."

"அண்ணு, நீ நகரவாசிகள்மேல் வைத்துள்ள அவாவினுல் எங்களுக்கு உன் பிராணனின் பேரிலுள்ள அபிமானத்தை எங்கே மறந்துவிடுகிருயோ என்று பயப்படுகிறேன். நீ எவ்வித உயர்ந்தபதவிக்கு வந்தாலும் அதனுல் ஆபத்து நேரிடுமாயின் என்மனம் ஒருபோதும் சகியாது."

"உயர்ந்த பதவிக்குவர எவ்வளவு இடுக்கண்நேரினும் அதை நான் சிறிதேனும் ஒருபொருட்டாய்க் கொள்ளேன். உயர்ந்தபதவி! - வீண் மனேராஜ்ஜியம்! என் சூழ்ச்சிகள்போதும். இனியுன் கருத்தென்ன? "

இவ்விதமான தன் மனேராஜ்ஜியங்களை நீக்கி நல்லபடவு-சுத்தமான உடை - பிரபுக்கள் கொடுமைக்கு அகப்படாத தூரத்தில் ஆநந்தமாக நித்திரைசெய்யக் கட்டில்-இப்படியாகச் சிறுவர்கள் தங்கள் கண்களிக்க விரும்புகிற விருப்பங்களே கொண்டுள தன் தம்பி சூழ்ச்சியிற் கலக்கலானுன் ; பின்னுல் இவன் நல்லபதவிக்கு வந்தபோது தன் எண்ணம் சரியோ தம்பி அவா சரியோ என்று எண்ணி எத்தனைதரம் இந்த சம்பாஷணையைப்பற்றி நினைத்து நினைத்து உருகுவான்.

"கொஞ்சங் கொஞ்சமாக நான் பொருள்சேர்த்து அதோ வருகிறதே அம்மாதிரி ஒரு படவுவாங்கி அதில் வியாபாரம்செய்வேன். உனக்கு வேண்டியகையெழுத்துப் பிரதிகளெல்லாம் வாங்கிக்கொடுப்பேன். அஃது எனக்கு எவ்வளவு ஆநந்தமாயிருக்கும்!"

"தம்பி உனக்கு வேண்டியதை நான் தரட்டும். ஆனாலும் அந்தப்படவின் எஜமானனுக்கும் சந்தோஷத்தைக்காண வில்லையே! முன்னும் பின்னும் சுற்றிலும் படவுகாரர் பார்ப்பதைப்பார்த்தால், இந்தமகா பட்டணத்தில் நண்பகலிற் கொள்ளைக்காரருக்காகப் பயப்படுகிறார்கள் போலத் தோன்றுகின்றனர். கொஞ்ச தூரம்போவதற்குள்ளேயே ஒரு ரோம்பிரபுவையே அந்தக் கொள்ளைக்காரனாகக் காணலாம். ஐயோ! நாம் என்ன கதிக்குவந்து விட்டோம்!".

மேலே கூறிய படவானது டைபர் நதியில் வெகு வேகமாய்ப் போய்க்கொண்டிருந்தது. முன்னணியில் நால்வர் யாரோசத்துருவை எதிர் பார்ப்பவர்போல ஆயுத பாணிகளாய் நின்றார்கள். படவும் மறைந்து விட்டது. சிறுவர்களும் தாங்கள் வந்து நெடுநேர மாய்விட்டதென்று வீட்டுக்குத் திருப்பினார்கள்.

"தம்பி, உபர்டோ சன்னியாசி தன் மடத்தில் ஒரு விசேஷமான கையெழுத்துப் பிரதியிருப்பதாக சொல்லி யிருந்தார். இன்று மாலை வருவேனென்று யான் சொல்லி யிருந்தேன். நமது பேச்சில் மறந்துவிட்டேன், நீ சிறிது நேரம் இங்கேயேயிரு; இந்த அவண்டைன் மலையிலேறிக்கொஞ்ச தூரம்போய் உடனே திரும்புகிறேன்", என்றான் கோலா.

"நானும் வரக்கூடாதா"?

"கூடாது; நீ இன்று அதிகமாய் நடந்து அலுத்துப் போயிருக்கிறாய். சிறிது இளைப்பாறுவாய். இதோ வருகிறேன்."

பையனும் எதிர்த்துப்பேச மாட்டாது ஒத்துக்கொண்டு கண்ணுக்கெட்டினவரையில் தன் தமயனையே பார்த்துக் கொண்டிருந்தான்.

சிறிது நேரம் குளிர்ந்த காற்றிலிருந்ததும் காலை தன் தங்கை ஜீன் தன்னைப் புஷ்பங்கள் கேட்டது ஞாபகத்துக்கு வந்தது. உடனே எழுந்து அங்குள்ள புஷ்பங்களைக் கொய்து ஒருமாலை கட்டிக்கொண் டிருந்தான். இவன் காதுக்குப் பெருங்கூச்சல் சமீபத்தில் கேட்டது.

"யாரோ பிரபு விருந்துண்டு திரும்புங் கோலம் போலும்!"

இது நற்காட்சி என்றாலும் சிறிது ஒதுங்கி யிருப்பேன், என்று கைம் மாலையோடு நதியோரம் போய்ச் சேர்ந்தான்.

உடனே ஒரு பெருங்கூட்டம் அவன் கண்ணுக்குத் தென்பட்டது. ஆயுத பாணிகள், இருவர் இருவராய் முன்னே குதிரையின் பேரிலும் பின்னால் ஏரா

ளமான ஜனங்கள் ஈட்டி பாலா முதலிய ஆயுதங்களுடனும் மதக்குறி எழுதிய ஓர்ஸினோ கொடி மேலே பறத்தலையுங் கண்டான். கண்டதும் அவன் மனம் நடுங்கிற்று :—ஏனெனில் அந்நகரத்தில் ஆயுத பாணிகளாற் சூழப்பட்ட ஒரு பிரபுவினிடத்திற் காட்டுமிருகங்களை விடப் பயமதிகம்-என்றாலும் அவன் எங்கு ஓடுவது ? அவர்கள் நெருங்கிவிட்டார்கள்.

"அடே, பையா-ஒருபடவு இந்த வழியாய்ப் போனதைப்பார்த்தாயா ? எத்தனை நாழிகை யிருக்கும்?" என்று ஓர்ஸினோ வம்சத்தலைவனாகிய மார்டினோ டி போர்டோ என்பவன் கேட்டான்.

சிறுவனோ பயந்து, "அரை மணிக்கு முன் ஒரு படவு இவ்வழியாய்ப் போயிற்று" என்றான்.

"முன்னாலே பச்சைக்கொடி போட்டு நேரோ ராயிற்று"?

"ஆமாம்".

"சரி, சந்திரன் புறப்படுவதற்கு முன்னால் அதைப் பிடிக்கவேண்டும். பையனும் கூடவே வரட்டும். அவனை விடாதேயுங்கள்; ஒரு வேளை கோலன்னாவுக்குச்சொல்லி விடுவான்."

இவ்வாருக "ஓர்ஸினி ஓர்ஸினி" என்ற இரைச்சலுடையராய் அச்சிறுவன் எவ்வளவு வருந்திக்கேட்டும் அவனை விடாமல் அவன் கையிலும் ஒரு வில்லைக்கொடுத்து இழுத்துக்கொண்டு போனார்கள். முன்னாற்போன படவு சற்றுத்தூரத்திலுள்ள கோலன்னாமார் கோட்டைக்குச் சாமான் கொண்டு போவதாயும் அதைத்திருப்பி மார்டினோ தன் கோட்டைக்குக்கொண்டு போக எத்தனித்தே சேனையுடன் வந்ததாயும் அவர்கள் சம்பாஷணையாற் சிறுவனுக்குத் தெரிய வந்தது. பயம் பின்னும் அதிகமாய் விட்டது. இவன் கோலன்னா சகுதியைச்சேர்ந்தவன். கோலன்னாவும் ஓர்ஸினோவும் ஜன்மப் பகையாளிகள்.

சிறிது தூரம் சென்றதும் படவு கண்ணுக்குத் தென்பட்டது. மார்டினோ படவு நமது தானென்று சந்தோஷித்தான். கூடவேயிருந்த ஜர்மானிய படைத்தலைவனோ, ஆளரவம் காணப்படுகிறது; சிறிது நிதானி என்றான். இதற்குள் யுத்த முஸ்தீப்புடன் ஆயுதபாணிகளாய்ச் சிலர் வந்தார்கள். கோலன்னாவுக்கும் ஓர்ஸினோவுக்கும் மும்முரமான சண்டை யுண்டாயிற்று. குதிரைக்காரரோ பூர்ண கவசம் தரிததிருந்தமையால் காயம்மட்டிலர். இடம் நெருங்கி யிருந்தமையால் எதிரிகள் பதாதி கலங்கின. இது தான் சமயமென்று மார்டினோ குதிரைப் பட்டாளத்தை ஏவினன். இதற்குள் ஒத்தாசைக்குக் கோலன்னாவுக்கு அநேகர் வந்து விட்டார்கள். மார்டினோ ஒன்றும் தோன்றாமற் பின்னிடையும்படி உத்தரவளித்தான். கவசம் பூண்ட குதிரைக்காரரோ தப்பினார்கள். பதாதிகளிற் சிலர் குன்றின்மேலேறி ஓடி ஒளித்தார்கள்; வேறு சிலர் நதியில்

றங்கி நீந்தி அக்கரை சேர்ந்தார்கள்; பாதையில் நேரே ஓடிய மற்றவர்களோ விசேஷமாய் வெட்டுண்டு மடிந்தார்கள். அப்படி யோடியவர்களிற் கோலாவின் தம்பியும் ஒருவன். பயத்தினால் அவன் தலை கிறு கிறு என்று சுற்றியது. அதிவேகமாக ஓடுகிறான். ஐயோ! பாவம்!! தந்தை தமயனை விட்டு ஒரு போதும் பிரியாதபாலகன். மரங்களெல்லாம் பின் தங்கின; நதியும் ஒரு பக்கம் போய் விட்டது; இன்னும் ஓடுகிறான். பின்னாற்குதிரைகளின் குளம்புச்சப்தமும் சத்துருக்களின் குரூரச் சிரிப்பும் கேட்கிறது; தன் தமயன் தன்னைவிட்டுப் பிரிந்துபோன இடத்துக்கு வந்து விட்டான் பின் திரும்பினான் குதிரைக்காரர்கள் ஈட்டியுடன் பக்கலில் நிற்பதைக்கண்டான் மலையினின்றும் வெகு வேகமாகத்தனக்காக ஓடிவருகிற தன் தமயனையுங்கண்டான்.

“அண்ணா! அண்ணா!! என்னைக்காப்பாற்றுவாய்!” எனவும் ஒருகுதிரைக்காரன் ஈட்டியை அவன்மேலோங்கினான் உடனேயவனும் பிணமாய்விழுந்தான். ஒருமணிக்குமுன்னே அதிபாலியமாயும் குதூகலத்தோடு மிருந்த சிறுவன் அதேயிடத்தில் ஈட்டியாற் குத்துண்டு கிடந்தான். குதிரைக்காரன் ஈட்டியைப்பிணத்தினின்றும் பிடுங்கிப்பின்னும் சத்துருக்களைத் துரத்தலானான். ரியனஜியும் கீழ் இறங்கி முழந்தாளிட்டு உட்கார்ந்தான்; சிறிதுநேரத்துக்கெல்லாம் கோலன்னுவம்சத் தலைவனாகிய ஸ்டீபனும் மற்றவரும் வந்தார்கள். முன்னேவந்த குதிரைக்காரர்கள் இவர்கள் முன்னணியே.

“ரியன்ஜி - இதென்ன? அப்பா!” என்றான் ஸ்டீபனும். “என்தம்பி. அறியாதகுழந்தை! நிரம்பசாது! அவன் இரத்தம் புல்லிற் சிந்தியிருக்கிறது. மஹாப்பிரபோ எனக்கு நியாயம் கிடைக்கவேண்டும்” என்றான் ரியன்ஜியும். “யார் அவனைக்கொன்றது? ஓர்ஸினோதான் அவனைக்கொன்றிருக்கவேண்டும். உனக்கு நியாயம்கிடைக்கும்”.

ரியன்ஜியோ தன் தம்பியின் முகத்தில் உதிரம் ஓடுவதை உற்றுப்பார்த்து, “நியாயம் நியாயம்”, என்று கத்தினான்.

வந்தவர்கள் இவ்விதக்கொலைநேரிடுவதைத் தினமும் கண்டவர்களாயினும் அவர்கள் மனமும் உருகிற்று. அவர்களில் மிக அழகுள்ள ஒருவன் கத்தியை உருவிக்கொண்டே கொலன்னா சமீபம்வந்து ஓர்ஸினோதான் இவ்விதக்கொலை செய்திருக்கவேண்டும். அந்தக்கொலைக்காரனைத்தொடர்வோம் என்றான்.

“ஏட்ரியா, நாம் வெகு தூரம்வந்துவிட்டோம். இனிப்போவது அபாயத்துக்கிடமாம்” என்றார் பெரிய கொல்லன்னாவும்.

இதற்குள் முன்னால் துரத்திக்கொண்டு போனவர்கள் திரும்பினார்கள். ஸ்டீபன் அவர்கள் தலைவனைப்பார்த்து உன்னுடைவீரத்திற்கு மெய்ச்சினோம். இச்சிறுவனை யார்கொன்றது? அவன் நமது கட்சிக்காரனாயினனே” என்றார்.

"யார்? அந்தச்சிறுவனா? அப்படியானால் என் அவன் மார்டிஞே வோடிருந்தான். அந்தத்தப்பிதத்துக்குத் தகுந்த கொலைநடந்தது. ஓர்ஸினோவைச் சேர்ந்தவனென்று எண்ணி நான்தான் அவனைக்கொன்றேன்" என்றான்.

"நீயா கொன்றாய்! மஹாப்பிரபோ, ஸ்டிபன்துரையே!! எனக்கு நியாயம் கிடைக்கவேண்டும்" என்று கர்ச்சித்தான் ரியன்ஜியும்.

"ஐயோ! பாவம்!! நான் ஓர்ஸினோவாயிருந்தால் தண்டிக்கிறேனென்று சொன்னேன். நடந்தது வேறுப்விட்டது. அதற்காக விசனப்படுகிறேன். இதற்குப்பதில் வேறு ஏதாவது உதவிசெய்கிறேன்" என்று மிகவும் பச்சாத்தாபத்துடன் சொன்னார் பெரியவரும்.

"இந்தா, இதை எடுத்துக்கொள். உன்தம்பி ஆத்மா பரத்தையடையும்படி ஜபம்பண்ண உதவட்டும்" என்று ஒருபை பொன்னை ரியன்ஜி பக்கத்திற் போட்டுவிட்டுத் தர்தையைப்பார்த்து, "அப்பா, நாம் படவண்டை சீக்கிரம் போகவேண்டும்" என்றான் கொலன்னு புத்திரனும்.

"சரி, யாராவது இருவர் பிணத்தண்டை யிருக்கட்டும்; என்ன துக்க சம்பவம்! ஏன் இப்படிநேரிட்டது" என்றுசொல்லி எல்லாரும் வந்தவழியே திரும்பினார்கள்.

ஏட்ரியனோ, ரியன்ஜிக்கு ஆறுதல்சொல்லச் சிறிது நின்றான். பெரியவரும் கூப்பிடவே "நான் உனக்குச் சகோதரனாயிருக்கட்டும். உன்னைப்போலும் எனக்கு ஒரு சகோதரன் வேண்டும்" என்று சொல்லிப் பிரிய மனமில்லாமலே அழுது கொண்டே ஏட்ரியன் மற்றவர்களோடு சென்றான்.

ரியன்ஜியோ பதில் சொல்லவுமில்லை, ஏட்ரியன் சொன்னது அவன்காதிலேறவுமில்லை. பெரியராஜ்ஜியப் புரட்சிக்குக்காரணமான மனோராஜ்ஜியங்களில் மூழ்கி யிருந்தான். கூடவிருந்தப் பட்டாளத்தார் இருவரும் தங்கள் கவசத்தைப் பாடையாகக் கட்டலும் திடீரென்று நினைவு வந்து அவர்களை அப்புறம் போகச் சொல்லி இரத்தம் ஒழுகும் தன் தம்பியின் தேகத்தை மண்ணோடு சேர்த்துக் கட்டிக்கொண்டான்.

• சிறுவன் விழும்போது கையில் வைத்திருந்த பூமாலை இன்னம் அவன் கையினின்றும் நழுவவில்லை. அதைக் கண்டதும் ரியன்ஜிக்குத்தன் ஒரே தம்பியின் நற்குணங்களெல்லாம் ஞாபகத்துக்கு வந்து விட்டன. "ஐயோ தம்பீ! தம்பீ! நமது தாயாரை இனி நான் எவ்வாறு காண்பேன்! இரவையும் தனிமையையும் எவ்வாறுசகிப்பேன்! கொலையாளி - கோலன்னு வானதனால் நியாயம் கிடையாதாம்- தம்பியின் இழவிற்கா இந்தப்பணம்-அவர்களிடத்தில் நியாயம் கிடையாதாம்" என்று சொல்லிப் பிணத்தைக் குனிந்து பார்த்து முணுமுணு வென்று சிறிது ஜபித்து முகம் வெளுக்க எழுந்து நின்றான். அவ்வாறு ஜபித்து எழுந்ததும் ரியன்ஜி வேற்றுமனிதனாய் விட்டனன்.

தம்பிமரணத்தோடு அவன் வாலிபமும் போய்விட்டது. தம்பி மரணம் நேரிடாவிடின் பின்னல் ரோபாபுரியை மீட்டவன் வீண்மமின்னு ராஜ்ஜியக்கா ரனுகவும், பிட்ரார்க்குக்குச் சரியான கவியாகவும் வித்துவானுகவுமே யிருந்திருப்பான். அதனுல் தேசாபிமானம் கனுவாயிருத்தலின்றி மெய்ப்பொருளாய் நின்று கொழுந்து விட்டோங்கிற்று. அப்போது பழிக்குப் பழிவாங்குமெண்ணம் அதற்கு நீர்பாய்ச்சியது போலாம். அதுவேரூன்றித் தழைத்தோங்கி யொருவிதத் தெய்வீகத்துவத்தையும் அடைந்தது.

---

முதலதிகாரம் முற்றிற்று.

க. கிருஷ்ணசாமி ஐயர்.

## ஆசார விளக்கம்.

---

### சூத்திரம்-3.

இந்நூ லருக்க னெனவுல கெங்கு
மன்னுக மறுசொன் மருவுழி யாடி
வண்ணக் கூட்டொளி நண்ணுத லொத்தே.

(இ-ள்.) இந்நூல் = ஆசார விளக்கமெனப்பெயரிய விந்த நூல், உலகெங்கும் = தமிழ் வழங்கும் நிலமெங்கும், அருக்கனென = இருளை நீக்கிப் பொருள்களைத் தோற்றுவித்துச் சுகமடையச்செய்துபகரிக்கும் பகலவன் போல, மன்னுக = (அறியாமையான் வருந்துன்பங்களை யஃதோட கற்றிச் சதா சாரங்களை விளக்கி இகபரமோக்க சுகங்களை யெய்தச்செய்துபகரித்து) நிலைபெறுக ; எ-று.

இரட்டுற மொழிதலென்று முத்தியான் இந்நூல்=தேசம் ஜாதி மதங்களுக்குரித்தாய்ச் சிறக்காது மானுடரனைவர்க்கும் பொதுவாஞ் சிறப்பிற்றாகிய இந்த நூற்பொருள், மறுசொன் மருவுழி = வேறு பாடையுருவொடு தோன்றுமிடத்து, வண்ண வாடிக்கூட்டு ஒளி நண்ணல் ஒத்து=பலவண்ணக்கண்ணாடிகளானமைத்த கூட்டின்கண் சார்ந்த சார்ந்தபக்கலுள்ள வாடி வண்ணத்தொடு பொருந்தி விளங்குழி ஒளிதன் பயனுகிய விளக்க லொன்றையே செய்தல் போன்று இந்நூற்பொருளும் பல் வேறுபாடைகளிற் சார்ந்து அவையிற்றினுருவொடு விளங்குழிக் கருத்தானும் பயனுனும் வேறுபாடின்றியே, உலகெங்கும்=பூவுலகின் கண்ணுள்ள வெல்லாத் தேயங்களினும், அருக்கனென மன்னுக = பூவுலகநிலம் விளங்குந்தகையனேயாயினும் இந்தியா எகிப்து பிரான்சு இலந்தன் ஆத்திரேலியா முதலிய தேயங்களிலொரே காலத்துத் தோன்றுது தேயவேறுபாட்டிற் கிணங்கக்கால வேறுபாடுடைத்தாய்த் தோன்றும் பகலவனுளி போலப் பல்வேறு தேய பாடைகளிலும் காலாந்தரத்திற் சார்க. நூல் என்றபதம் நூற்பொருளுக்காதலான் ஆகுபெயர்.

இந்நூற்பொருள் நன்னூல் தொல்காப்பிய முதலியனபோலத் தமிழ்ப் பாடை யொன்றற்கே சிறப்பிற்றாகாது ககோள பூகோள கணித நூல்களைப் போல (தேசம் சாதி மதங்களுக்குப் பொதுவாவதோடு, பாடைகட் கெல்லாம் பொதுவாம் விடைய முடைத்தாதலானும், பற்பல தேயங்களின் ஆசாரங்களை நுவன்று இது நல்லது இது தீயது எனக்கூறலானும், தேசகன பேதம் பற்றி யாசார பேதமாதற் கவசியங்கூறலானும், இஃதைப் பல பாடைகளிற் செய்து உலகநிலம் பரவச்செய்ய வேண்டுமென்பது ஆக்கியோன் கருத்தாதலானும், அங்ஙனம் பயன் படுமாறு ஒளி யொன்றே பல வண்ணவாடிக் கூட்டின்கண் வைகியக்கால் ஒரு பக்கலுள்ள சிவப்புக் கண்ணாடியோடு சேர்ந்து சிவந்தவுருவொடும், பச்சையத்தத்துப்பட்டுப் பச்சை மேனியொடும் பொன்னிறவாதரிசனத்துற்றுப் பொன்மை யெழிலொடும், இவ்வணஞ் சார்ந்த சார்ந்த தருப்பண நிறத்தொடும் பல் வேறு வகைப்பட்டு விளங்கினும், விளக்குதற்றொழில் வேறு பாடின்றி யொன்றேயாதல் போன்று இந்நூற்பொருளும் பல வேறு பாடைகளிற் சார்ந்து அவையிற்றினுருவொடு விளங்கினும் கருத்தானும் பயனானும் வேறு பாடின்றி விளங்குந் தனகத்தாம் என்றதூஉம், மறுசொன் மருவுழிப் பொருள் வேறுபாடின்மை யுணர்த்தப் போதரும், அஃது ஒரு காலத்துப்பல் வேறுருவடைதற்குவமை. வேறுபட்ட காலங்களிற் (வேறுபட்ட பாடைகளிற்) றோன்றுவதற்கு அஃதுவமையர்காது; அதான்று, காலாந்தரத்திற் றோன்றுவதை இந்நூலிற் கூறுவதெற்றுக்கு? இப்பொருள் வேறு பாடைகளிற்றோன்றின் அந்நூல்களின்வை வழங்கு நிலன் கூறலே சாலும் என்பார்க்குப்பல வேறு தேயங்களிற்பல வேறு காலங்களிற் றோன்றினும் தோன்றும் பகலவன் ஒருவனேயாதல் போலப் பல வேறு காலங்களிற்பல வேறு தேயங்களிற் பலவேறு பாடைகளிற்றோன்றினும் அங்ஙனந் தோன்றுவது இஃதொன்றேயாகலின் அவ்விணுக்கட்குடனின்றென்றுஐய மறுப்பான் வேறுவமை யெடுத்து "அருக்கனெனச் சார்க வுலகெங்கும்" என்னப்பட்டது.

வேறுபாடை யுருவொடு தோன்றுமாறு செய்வார் தங்கருத்தையுமிந் நூலுட் கலவாதுள்ளவாறே பொருள்வேறுபடாது செய்க. தங்கருத்தைக் கூறவேண்டிற் றங்கருத்தாக வேறு தோன்றக்கூறுக. ஓதுவா ரிந்நூற் பொருளிஃதென் றுள்ளவாறுணர்தற்பொருட்டு என்றுரைப்பான் "மறுசொல் மருவுழியாடி வண்ணக்கூட்டொளி நண்ணுதலொத்தே" என்னப் பட்டது. ஆக்கியோனே உரைவரைந்ததூஉந் தன்கருத்து வேறாகாமைக்கே. இஃது இருசூத்திரவியல்பிற்று மொருசூத்திரம்.

கருத்து.

இந்நூல் தமிழ்நாடெங்கும் அருக்கனென்ன அறியாமையை நீக்கி ஆசாரங்களை விளக்கி நிலைபெறுக இந்நூற்பொருள் மறுசொன் மருவுழிப் பல்வண்ணவாடிக் கூட்டொளி போற்பொருள் வேறுபாடின்றியே அருக்

கன்போல வேறுபட்டதேயங்களில் வேறுபட்டகாலங்களிற் றோன்றியுலகெங்குஞ் சார்ச. (எ - று) இந்நூற்பொருள் அருக்கனென்ன வேறுபட்ட காலங்களில் மறுகொண்மருவுழிப் பல்வண்ணவாடிக் கூட்டொளியொத்துப் பொருள்வேறுபாடின்றியே உலகெங்குஞ்சார்ச என்பதூஉமொன்று.

## சூத்திரம் - 4.

### அவையடக்கம்.

தெளிவுற வொன்றுந் தெரிந்தில னேனும்
பிறர்நயம் பேணிப் பகர்தலிற் குணத்தைக்
கருதி மிருகக் கழிமதங் கொளல்போ
லேற்ப ரென்சொலு மெழிற்புல வோரே.

(இ-ள்). தெளிவுற வொன்றுந் தெரிந்திலனேனும் = யான் ஐயந்திரிபின்றித் தெளிவு பொருந்தும்படி எதுசெயல் பயனொடு ஆசாரமொன்றுந் தெரிந்திலனாயினும், பிறர்நயம் பேணிப்பகர்தலின்=அநேகர் சதாசாரங்களைத் தெரியாமலும் தெரிந்தும் விபரீதபுத்தியாலவைகளை யவமதித்தும், விகற்பவுணர்வினராற் கலக்கப்பட்டையமெய்தியும் தாமே அசிரத்தை வைத்தும் அவைகளை யநுசரியாது பல துன்பங்களையடைந்து இம்மை மறுமைச் சுகங்களைத் தாமிழத்தலோடு தாமுறைபதிக் கண்ணுறை பகை நொதுமல் நட்பென்று மூத்திறத்தினர்க்குந் தீங்கிழைத்த லேக்கிப்பிரிந்து அவர் நன்மைபடைய வேண்டுமென்று விரும்பிக்கூறுதலான், குணத்தைக் கருதிக் கழிமிருகமதங்கொளல் போல்=நிடேதிக்குந் தன்மைத்தாகிய மான்மதத்தை அதன் நல்லவாசனைபாதி நற்குணத்தைவிரும்பிப் பயன்றரும் பொருளாக அங்கீகரிப்பதுபோலே, என்சொலு மேற்பர் உண்மையில் நிடேதிக்கத்தக்க எனது புன்சொல்லையும் (பிறர் நயம்பேணிய உபகாரங் கருதிப்பயன்றரு மொழியாக) அங்கீகரிப்பர், எழிற்புலவோர் அழகிய அறிவான் முதிர்ந்தோர், எ-று.

### பதசாரம்.

ஜீவர்தெளிவுற வொன்றையுந் தெரிதலசாத்தியம் அறிவுவிருத்தியாமளவுமறியாமையும் விருத்தியாகலின்* உதாரணமாக ஒருவன் வேப்பமரத்தைக் கண்டு மரம் என்றுமாத்திரம் அறியின் அஃதுண்மையின் மரமாகலின் இடுகுறிப்பொதுப் பெயரான்வழக்கத்தான் அவனறிந்தவறிவு ஐயவிபரீதங்களினின் பாற்படாத தெளிவாகலின் மரம் என்றதுயாது காரணம்பற்றி யென்றவையம் உண்டாகாது, அவன் மாட்டேற்றப்படும் அறியாமையு மவற்கின்றாம். வேம்பிற் பட்டுவருங்காற்று தொத்து ரோகங்களையும் விடங்களையும் நிவிர்த்திக்கும் என்று செவியுற்றானொருவன் யாதுகாரணத்தால் அக்காற்றுக்கு அக்குணங்களுண்டாயின வென வறிந்தார் பால் விசாரித்து இலை பொதுளிய

வேம்பு எல்லாவித நச்சணுக்களையும் விசேடமாய்த் தன்பாற் கொண்டு தொத்துரோக விஷாணுக்கள் நஞ்சையும் விஷங்களையு மாற்றும் அமிர்தம் போன்ற ஜீவவாயுவை நிசுவாசிப்பதனல் அந்நிசுவாசத்தோடு கூடிய காற்றிற்கு மக்குணங்க ளுண்டாயின வெனத்தேர்கின்றுன். அங்ஙனந் தேர்ந்தும், தொத்துரோக விஷாணுக்க ளெத்தகையன? சற்ப விஷாணுக்க ளெத்தன்மையன? அவைகள் யாது காரணங்களால் எவற்றினின்றுந் தோன்றுகின்றன? அவைகளின் நச்சுத்தன்மைகளை வேம்பின் நிசுவாசத்தோடுகூடிய காற்று எங்ஙன மாற்றும்? தொத்துரோக அணுக்கள் விஷாணுக்கள் வேம்பின் நிசுவாச அணுக்கள் மனித சீரதாதுக்களில் என்ன பேதங்களை யெப்படிச் செய்கின்றன? என அவைகட்குக் காரணங்களை விசாரிக்கின் அவ்வினுக்களுக்குத் தெளிவுற விடையிறுக்க எத்துணை நூல் வல்லுநரு மிடர்ப்படுவர் ஒருவாறு விடையிறுக்கினுங் காரணத்துக்குக் காரணம் விசாரிக்கிலென்னும்? இங்ஙனமே வேம்பின் வேர் மது உரி இலை கொழுந்து சீர்க்கு பூதேன் பிஞ்சு பிஞ்சின்பால் வித்து பிண்ணுக்கு நெய் சிராய்ப்புகை பழம் பிசின் பூவாடைக்காற்று நிழல் களுக்கு ஒவ்வொன்றுக்கும் பல்வேறு குணங்களுள்ளன. அக்குணங்களுக்குக் காரணங்களையும் அக்காரணங்களுக்குக் காரணங்களையும் தெளிவாய் விசாரிக்கப் புகின் தாபர, வைத்திய, இரசாயன சாத்திர நிபுணர்களுக்கும் எத்துணை யறியாமை வந்தேறும்! இப்பேதங்களெல்லாம் பஞ்ச பூதப்பகுப்பிற்படும் ஒடுங்கு முறையிலவற்றிற் சூக்குமம் குணதத்துவம் அதனிற் சூக்குமம் மூலப் பிரகுருதி அதனிற் சூக்குமம் கலாதத்துவம் அதனிற் சூக்குமம் ஜகத் பரம காரணமாகிய மாயை அதற்காதாரம் சக்தி அதற்காதாரம் சத்து ஆம். அவை தோன்று முறையில் சத்து மகாமகா சூக்குமம் சக்தி மகா சூக்குமம் மாயை சூக்குமம் கலாதத்துவம் அதனிற்றூலம் அதனிற்றூலம் மூலப்பகுதி அதனிற்றூல மாகாயம் அதனிலொன்றுக்கொன்றதி தூலம் வாயு அனல் நீர்மண் ஆம். இவைகளினிருக்கைகளைப் பற்றிப்பலர் பலவாறு கூறுகின்றனர். (1) இவைகளிற்றனக்குக் காரணக் காரணங்களை நோக்க ஆகாய மிகத்தூலப் பொருள். அதைப்பற்றி எத்துணை நுணுகி விசாரித்தூகிக்கினும் அதனிலெண்மயித் தன்மைத் தெனத் தெளிவுற நிதானித்த லருமையாம். காரணத்தை நோக்க வதிதூலப் பொருளாகிய ஆகாய நிலையை மனத்தறிதலருமையாகிய அதில் நுட்பத்திநுட்பமாகிய பொருள்களின் றன்மைகளை யெங்ஙனந்தெளிவுற நிதானிப்பது? அத்தகைச் சூக்குமப் பொருள்களினின்று தோன்றித் தூலித்துச் சப்தேந்திரியத்துக்கு விஷயமாய் அதனிற்றூலித்துச் சத்தபரிசங்களுக்கு விஷயமாய் அதனிற்றூலித்துச் சத்தபரிசரூபங்களுக்கு விஷயமாய் அதனிற்றூலித்துச்சத்தபரிசரூபர சங்களுக்கு விஷயமாய் அதனினுந் தூலித்து சத்தபரிசரூபரசகந்தங்களுக்கு விஷயமாகி வான்கால் அனல் புனல் மண்ணெனப் பேர்பூண்ட பூதபஞ்சீ கரணங்கள் அவையிற்றிற் றேன்றிய நூற்றிருபான்

உபரசச் சத்துக்களாகிய லோகபேதங்கள் (2) வாயுபேதங்கள் அவையிற்றின் சேர்க்கைகளிற் றோன்றிய அநந்த பேத சத்துக்கள் பன்னிரு தோடவணுக்கள் அவைகளின் நூனுதிக்க சமசங்கர பேதங்களோடு தோன்றிய (வித்துவியர்வை முட்டை பைகளிற் றோன்றிய வுயிரோடுகூடிய வுடல்களில்) தாவரங்கள் பத்தொன்பது நூறுயிரம் பேதங்கள் அவற்றில் ஒவ்வொன்றின் ஒவ்வோர் அங்கத்தினு மமைந்தவணுக்களின் பேதங்களையும் தெளிவுறவறிய முயலில் ஒவ்வொருகாரணம் விசாரிக்குங்காலும் அறியாமை தோன்றியநந்த வறியாமை கணக்கிட நேரிடும். இங்ஙனமே ஆசாரத்தினும் "நல்லாகாரங்கொள்க, எனில் எது எது நல்லாகாரம்? அப்பொருள்கள் எத்தகையணுக்களின் கூட்டங்களாலாயின? அவ்வணுக்கள் எங்ஙனந் தோன்றின? என்பனவாதிய சங்கைகள் நிகழ்ந்துழித் தெளிவுறவிடையிறுக்க விடர்ப்பாடுண்டா மென்பது துணிவு. இங்ஙன மெத்தகை நூல் வல்லுநராலு மறிதற் கருமையாங்காரண காரியங்கண் முற்றும் யானெங்ஙனம் தெளிவுறவுணர வல்லுநனுவன் என்பான் "தெளிவுற வொன்றுந் தெரிந்திலனேனும்" என்றும்

இங்ஙனம் ஒருபொருள் ஓர் ஆசாரம் பற்றிக்காரண காரியங்களைத் தெளிவுறவோராதான் உலகிற் கவசியமாகிய சகலா சாரங்களையும் முற்றறிவொரு பொருளோடு நீக்க மின்றி நின்றுணாத்த இருடிகளுரைக்காத வது செய்து பயன்றோன்ற விளக்கிக் குயிறல் முற்று மேலாமை ஆகலிற்கூறுதுவாளா விருத்தலே சாலு மெனில், அற்றன்று, யான் எற்குத்தோன்றியவாறு புகலாது ஆகமாதி நூல்களினுதாரம் பற்றி என்னளவு ஆசார நூல்களை யோதி யுக்தி யநுபவங்களோ டொட்டி யுணராதாருலகின் மிகுத்துளராதலினன்னவர் சுகம் பலமாதி நன்மையடைதலை வேண்டி நுவல்கின்றனன் என்பான் "பிறர் நயம் பேணிப்பகர்தலின்" என்றும்,

கத்தூரி தள்ளத்தக்க மிருகமதமாயினும் துர்வாடைகளைப் போக்கி நல்வாடை தந்து நோய் கெடச்சுகம் பயப்பது போல இந்நூலுங்கல்வி கேள்வி சாரமறியாதார்க்குத் துராசாரங்களைப் போக்கிச் சதாசாரந்தந்துமின்பகல வின்பம் பயப்பதா முபகாரத்தைப்புரிய வேண்டு மென்னு மாசையொடு செய்தலின் இனிதி னங்கீகரிப்பர், "எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினு மப்பொருண் மெய்ப்பொருள் காண்பதறிவு" "தாமின்புறுவதுலகின் புறக்கண்டு காமுறுவர் கற்றறிந்தார், "அருட்செல் செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட் செல்வம் பூரியார் கண்ணுமுள" என்ற நாயனூர் வாக்கியங்கட் கிலக்கியமாம் அழகிய அறிவான் முதிர்ந்தோர் என்பான் "பிறர் நயம் பேணிப்பகர்தலிற் குணத்தைக்கருதி மிருகக்கழி மதங்கொளல் போலேற்ப ரென்சொலு மெழிற்புலவோரே" என்றுங் கூறப்பட்டன. எனவே மெய்ப்பொருள் காணுதார் அறிவிலார், தாமின்புறுவதுலகின் புறக்காமுறுதார் கல்வியிலார், அருட்செல்வமிலார் இழிஞர், ஆகலின் அல்லாராம்

அன்னவர் அறியாமை பொறுமை அருளின்மை காரணமாகச் சாற்றுஞ் சொற்கள் கணிக்கத்தகாதன வென்ப.

---

பலர் பலவாறு கூறுவன:—சாருவாகர் வான்றவிர நான்கு பூதங்கடா மூளவென்பர். மிகப்புத்தி சாலிகளெனக்கொண்டாடும் புத்தரும் அங்ஙன மேபூத நான்கென்பர். தார்க்கிகர் ஆகாயம் வரை கொள்வர். சாங்கியர் மூலப்பகுதி வரை யொப்புவர். ஏகான்ம வாதிகள் மாயாரூப ஜகத்து இல் பொருள் கயிற்றரவென பிராந்தியாலிருப்பதாய்த் தோன்றுகின்றதென்பர். பிரகிருதி ரூபப்பிரம்வாதிகள் பிரகிருதி வரை யொப்புவர். பல அநுபவ சாத்திரிகள் (Scientists) ஆகாயம் (Ether) வரை யொப்புகின்றனர். ஹெர் பெர்ட்ஸ்பென்சர் (Herbert spencer) பொருள் (Matter) செயல் (Motion) களைக்கூறி அவைகளுக்குக் காரணமாகிய சக்தி (Force) மனதுக்கெட்டாத தாய் அளவற்றதாய் ஆதியந்த மற்றதாயிருக்கிறதென்று சக்தியை மாயை யோ டபேதமா யொப்புகின்றனர். இங்ஙனஞ் ஜகத்காரணங்களைப் பற்றி ய வபிப்பிராயத்திற் பல வேறு பாடுகளுள்ளன.

(2) உபரசச்சத்துகள். Metals.

(3) H. Spencer. "All these phenomena from their great features even to their minutest detail are necessary results of the persistence of force under its forms of matter and motion. "That which persists unchanging in quantity," but ever changing in form, under these sensible appearances which the universe presents to us, transcends human knowledge and conception, is an unknown and unknowable power which we are obliged to recognise as without limit in space and without beginning or end in time."

* சித்தாந்தசாகரம் "அறிவெவ் வளவிற் றறியா மையுமற், றறிதொறுந் தேவை யதிகப் படலான்"

ஆக்கியோன்பெயர்=சிவஞானயோகி

வழி=ஆகமாதியைந்திறப்படு நூல்களின் வழி

நுதலியபொருள்=நன்னடைகள்

நூற்பயன்=அறப்பொருளோடு இம்மை மறுமை மோக்கசுகங்கள்.

நூற்பெயர்=ஆசாரவிளக்கம்,

அதிகாரிகள்=சுயநன்மைபரநன்மைவிரும்பும் உலகிற் சமயத்துட்பட் டோருஞ் சமயத்துட்படாரும் ஆனமானுடரனைவரும்.

விகற்பம்=வேதுபலன்களை விளக்கிக்கூறல்

எல்லை=தமிழுருவிற்று மிந்நூற்குத் தமிழ்நாடுகளெல்லாம் எல்லை. பொ ருளாலுலகிற்குப் பொதுமையாகலின் மானுடர் வியாபித்த உலகமுழுதும் எல்லை.

விருதை - சிவஞானம்.

பாயிரம்முற்றிற்று.

# ருக்குமணி சரித்திரம்.

## அத்தியாயம்-I.

விளம்பி வருஷம் பங்குனிமீ 15உ இரவில் மாயவரம் ரயில்வே ஸ்டேஷனில் கும்பகோணம் திருச்சிராப்பள்ளி மதுரை முதலிய இடங்களிற்குப் போகவேண்டியதற்காக, அநேகர் காத்துக் கொண்டிருந்தார்கள். போகவேண்டிய இடங்களுக்குச் சீட்டு வாங்கி வெகு நேரமாய்விட்டது. புகை வண்டி வரவில்லை வரவில்லையென்று அநேகர் தத்தளித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒருசார், வண்டி தண்டவாளத்தினின்றும் நழுவி விழுந்து விட்டதோ வென்று பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஒருசார், வண்டிகளை இழுக்கும் நீராவியந்திரம் கெட்டுப்போய் விட்டதோவென்று பேசிக்கொண் டிருக்கிறார்கள். இப்படிப்பலர்கூடிப் பலவிதமாய்ப் பேசிக்கொண்டிக்கையில், வண்டி வருமோசைகேட்டது. பின்பு இரண்டு நிமிஷத்துக் கெல்லாம் வண்டிவந்து விட்டது.

உடனே, அநேகர் வண்டியினின்று மிறங்கினார்கள். அநேகர் வண்டியிலேறினார்கள். இவ்விதமாக அவ்விடத்தில் மிகக்கூட்டமும் பேரொலியுமாருந்தது. இப்படி யிருக்கையில் **சுப்பையர்** என்று பெயர் பெற்ற ஓர் அந்தணர் வண்டியின் ஒரு கதவை அதன் பிடியை யழுத்தித்திறந்தார். உள்ளே **காதர் மஸ்தான்** என்னும் துலுக்கன் அவன் மனைவி இரண்டு குழந்தைகள் ஆக நான்கு பேர்களே உறங்கிக் கொண்டிருந்தார்கள். சுப்பையர் வண்டிக் கதவைத் திறந்தவுடன் மஸ்தான் சரேலென விழித்துக்கொண்டு, கதவைப் பிடித்து இழுத்துச் சாத்திக்கொண்டான்.

"யார் ராலே கதவைத்தறடா" என்றார் சுப்பையர்.
"போங்காணும் போரீரா ஒரு அறைகுடுக்கட்டுமா" என்றான் மஸ்தான்.
"யேண்டாலே படவா என்னை நீ அறையறதா."
"சீச்சீப்போம்."
"ஒனக்குத்தான் காணியாச்சியோடா இந்த வண்டி."
"ஆமாம் போங்காணம் போம்."
"ஒரு வண்டிக்கி எட்டுப்பேர்ன்னுடா ஒக்காரணம்."
"பொகு ரூல் பார்த்தவர்தான் போம்."

இப்படி ஒருவருக்கொருவர் வார்த்தை தடித்தது. சுப்பையருங்கூட இருந்த அவர் அம்மாஞ்சி கிருஷ்ணசாமிஐயரும், கதவைப் பலமாகப் பிடித்திழுத்து உள்ளே போக, அத்துலுக்கன் அவ்விருவரையும் பிடித்துக் கீழேதள்ளி விட்டான். உடனே சுப்பையருங் கிருஷ்ணையருமாக ஒருங்கே,

'ஏ போடர் போடர்' என்று கூவினார்கள். கூவினவுடன் சேவகன் அந்த ஸ்டேஷனுக்கு அதிகாரி, வண்டி போட்டுபவன், இன்னு மநேகர் கூட்டமாயோடி வந்தார்கள். வந்து அந்தப் பிராமணரிருவரையும் அதே வண்டியிலேற்றி விட்டு அவர்கள் எல்லோரும் போய்விட, வண்டியும் மாயவரத்தை விட்டுப்புறப்பட்டு விட்டது.

வண்டியிலுட்சார்ந்து கொண்டிருந்தவர்கள் இரண்டு மூன்று மைல் போகிறவரைக்கும் ஒருவருக்கொருவர் பேசவில்லை. பிறகு சுப்பையர் அம் மௌனநிலையைப் பின்வரும் வார்த்தைகளினால் மாற்றுவித்தார்.

"எந்தூருக்குபோரீர் ராவுத்தரே"

"போய்யாபோ, சென்னப்பட்டணத்திலிருந்து வாரேன் அரைவிநாடி தூங்கலேய்யா. எந்த ஊருக்கு நீபோரேங்காணும்"

"மதுரைக்கிப் போரேனப்பா"

"என்னாத்திக்கி"

"ஒரு கல்யாணவிஷயமா ஏற்பாடுபண்ணப்போரேன், அஞ்சாறுநாள் அங்கேருக்கணம். என்னகஷ்டம்போ"

இப்படி இவ்விருவரும் பேசிக்கொண்டு எத்தனையோபொய்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஏனெனில் அத்துலுக்கன் மாயவரத்துக்கடுத்த சீர்காழியிலிருந்து புறப்பட்டு வந்தவன். சுப்பையரோ தஞ்சாவூருக்குத்தான் போகிறார். அதிகதூரம் தாங்கள் புகைவண்டியிலேறிப் போவதாகச் சொல்லிக்கொண்டால் தங்களுக்குப்பெருமையென்றெண்ணிக் கொண்டார்கள். இதுநிற்க. மஸ்தான் தனது சட்டைப்பையிலிருந்து ஒரு சுருட்டை யெடுத்துவாயில் வைத்துக்கொண்டு அதைக்கொளுத்தினான். உடனே அம்மாஞ்சி கிருஷ்ணையர் தலையில் அடித்துக்கொண்டு,

"அத்தான் அப்பவே சொன்னேனே, துலுக்கப்பய வண்டிலே ஏறுதேன்னு, கேட்டியா?".

உடனே சுப்பையர் "ப்ரஷ்டப்பயலே சுருட்டுக் குடிக்காதடா" என்றார்.

மஸ்தான் கொல்லென்று சிரித்தான். பிற்பாடு சுருட்டை எறிந்துவிட்டு "எறிந்திட்டேங்காணும் சும்மாரும், கத்தாதீம்" என்றான்.

"எந்த டேஷன்லே எறங்கறேப்பா" என்று சுப்பையர் மஸ்தானைக் கேட்டார்.

"கும்போணத்தில் எறங்கிமேக்காரிக்கிப் போறேன்"

"ஒங்கூர் லேல்லாம் வெளச்ச எப்படி"

"என்ன வெளஞ்சா என்னபோ, வரிபோட்டுல்ல ப்ராணத்தைப் பிடுங்கிட்ரான்".

அம்மாஞ்சி கிருஷ்ணையரோ இப்படிச் சுப்பையரும் மஸ்தானுமாகப் பேசிக்கொண்டிருக்கையில் வெற்றிலைப் பெட்டியைத்திறந்து வெற்றிலை போட்டுக்கொண்டு எச்சில் துப்புவதற்காக எழுந்திருந்து மஸ்தான் மனைவியிருந்த பக்கத்துக்குச் சென்றார். கிருஷ்ணையர் சரீரம் சிறிது ஸ்தூலமாயிருந்ததனால் எவ்வளவு தேகத்தை ஒடுக்கிக் கொண்டு போனாலும், அவரது தேகம் மஸ்தான் மனைவிமேற்பட்டு விட்டது; உடனே அவள் எழுந்தாள். மஸ்தானுமதைப்பார்த்து விட்டான், அவர் செய்ததை ஒரு பெரிய அநியாயமாக எண்ணி "எய் நீ பாப்பானா? கோஷாமேலே உள்ளறயோடா" என்று கூவினான். கிருஷ்ணையர் நடுநடுங்கிப்போய்க் கால்கை உதற மயிர்க் கூச்சலெடுக்க "நான் ஒடுங்கிக்குண்டு தானே போனேன்" என்று மெல்லச்சொன்னார். ஏக சிலையையும் முன்னமே விழுங்கிவிட்டார். சுப்பையர் எழுந்து அம்மாஞ்சியைப் பிடித்துக் கொண்டு "தான் என்னமோ தெரியாத்தனமாப் பண்ணிவிட்டான், விட்டுடுசொல்றேன். ஒக்காரு" என்று மஸ்தானைநோக்கிச் சொல்லிவிட்டு, கிருஷ்ணையரையும் தான் கண்டிப்பதாக அவன் நினைத்துக்கொள்ளட்டுமென்று "ஏக்ருஷ்ணா நானேமொதக்கண்டு அப்படிபெல்லாம் பண்ணாதே" என்றார் மஸ்தானுமுட்கார்ந்துகொண்டான், புகைவண்டியும் கும்பகோணம் போய்ச்சேர்ந்தது. மஸ்தான் வண்டியைவிட்டுக் கீழிறங்கி அவ்விருவரிடத்திலும் வெகுமரியாதையுடன் விடைபெற்றுக்கொண்டு மனைவி குழந்தைகளுடன் போய்விட்டான்.

ஒரு மணிநேரத்தில் வண்டியும் கும்பகோணம் புறப்பட்டுத் தஞ்சாவூர் போய்ச்சேர்ந்தது. மதுரைக்குப்போவதாகச்சொன்ன அவ்விருபிராமணர்களும் வண்டியினின்று மிறங்கினார்கள். இவர்களிருவரும் இறங்கும்பொழுது வண்டியிலேறுவதற்காக ஒரு சுமங்கலி நிற்க சுப்பையர் மிகவியப்புற்று, "பலேபலே அம்மாஞ்சி நம்மகாரியம் ஜயமாறத்துக்குத் தடையென்ன?" வென்று கத்தினார். வண்டியைவிட்டு இறங்கிச் சீட்டுக்கொடுக்கவேண்டிய இடம்போய்க் கிருஷ்ணையர் வெற்றிலைப்பெட்டியை அவிழ்த்தார். சீட்டு உள்ளேகாணப்படவில்லை. சுப்பையர்மேற் குற்றத்தையேற்றிவிடவேண்டுமென் றெண்ணிக்கொண்டு "அத்தான், இடுப்பிலேவச்சுண்டிருந்தயே டிகட்டைகுடு" என்றார் கிருஷ்ணையர், சுப்பையரோ கிருஷ்ணையரிடஞ் சீட்டைக்கொடுத்ததாகவே சாதித்தார். எவ்வளவுதேடிப்பார்த்தும் சீட்டு அகப்படவே இல்லை. சுப்பையருங் கிருஷ்ணையரும் விழுப்புரமிருந்து தஞ்சாவூருக்குக் கொடுக்கவேண்டிய சத்தத்துக் கிரட்டைமடங்கு செலுத்தினார்கள். ஸ்டேஷன் விட்டு வெளியேவந்து திருவையாற்றுக்கு மாட்டுவண்டி திட்டம்பண்ணிக்கொண்டு இவ்விருவரும் வண்டியிலேறிப் போனார்கள். போகிறவழியிற் பொழுதும்விடிந்தது; சீட்டுக்களும்விபூதிசம்புடத்திற் காணப்பட்டன.

முதலத்தியாயம் முற்றிற்று.

கு. ரா. ஸ்ரீநிவாசன்.

# ஹிரண்மயி சரித்திரம்.

## அத்தியாயம் - ச.

விவாகமான பின்பு தனதாஸன் மனைவியையும் மகளையும் அழைத்துக் கொண்டு தன்னூர் வந்து சேர்ந்தான். நான்கு ஆண்டுகள் சென்றன. புரந்தரன் திரும்பிவரவில்லை. ஹிரண்மயிக்கு அவன் மறுபடி திரும்பி வந்தாலென்ன ? வராமற்போனால் என்ன ? இரண்டு மொன்றே யாம்.

புரந்தரன் ஏழு ஆண்டுகள் கழித்தும் வரவில்லையே என்று ஹிரண்மயி சிறிது துக்கமுற்றனள். அவள் மனத்தில், என்னை இன்னும் ஞாபகத்தில் வைத்துக் கொண் டிருப்பதனால் வரவில்லை என்று சொல்வது மிகவும் பொருந்தாததா யிருக்கின்றது ; அவன் உயிருடன் இருக்கின்றானோ இல்லையோ, அதுவே சம்சயமா யிருக்கின்றது; அவனைப்பார்க்க வேண்டுமென்று இஷ்டப்படுவதில்லை, இப்பொழுது நான் வேறொருவனுடைய மனைவியா யிருக்கின்றேன், ஆனால் என்னுடைய பாலிய சினேகிதன் ஜீவித்திருக்கட்டும் என்று நான் ஏன் விசாரிக்கூடா தென்று யோசித்தனள்.

தனதாஸன் ஏதோ சில காரணங்களினாற் சிந்தாக்கிராந்தனா யிருந்தான். தினக்கிரமத்திற் சிந்தையும் அதிகரித்துவர, கடைசியிற் கொடிய நோயில் வீழ்ந்தான். சிறிது காலத்திற் குள்ளாகவே அவனுக்கு மரணம் சம்பவித்தது. தனதாஸனது மனைவியும் பதியுடன் அநுமரணம் செய்தாள். ஹிரண்மயிக்கு ஒருவருமில்லை. அவள் பலவிதங்களிலும் தன் தாயாரின் கால்களைப் பிடித்துக் கொண்டு இப்பொழுது சாவவேண்டாம் என வேண்டிக் கொண்டாள். ஆனாற் செட்டியின் பத்னி அதனைக் கேட்டாளில்லை. ஹிரண்மயி ஏகாங்கியாய் இப்புவியில் மிகுந்திருந்தாள்.

உடன்கட்டை யேறுகையில் ஹிரண்மயியின் அன்னை மகளை நோக்கி, ''குழந்தாய், நீ என் யோசிக்கின்றாய்? உனக்கென்னவோ கணவன் ஒருவன் இருக்கவே இருக்கின்றான். குறித்த காலத்திற்குப் பிறகு அவனை நீ பார்த்தாலும் பார்க்கக்கூடும். அப்படிப் பார்க்காமற் போகும் பட்சத்தில், நீ இனிப் பாலிகையல்லை, இவ்வுலகில் முக்கியமான துணையென்று சொல்லப்படும் செல்வ மென்பது உனக்கு மிகுதியாயிருக்கின்றது. யோசிக்க வேண்டாம்,'' என்றாள்.

ஆனால் அவ்வாசை விபலமாய்ப் போய்விட்டது. தனதாஸனது மரணத்துக்குப்பின் பார்த்தபொழுது அவன் ஒன்றும் செல்வம் வைத்துவிட்டுப்போகவில்லை. ஒரு பெரிய வீடு, சம்சார சாமக்கிரிகள், சில ஆபரணங்கள் இவைதப்ப மற்றெவையுமில்லை. இதைப்பற்றி ஹிரண்மயி விசாரித்தபொழுது, தனதாஸனது வியாபாரத்தில் சில வருஷங்கள் நஷ்டமேவந்ததென்றும், அதை ஒருவருக்கும் சொல்லாமல், அதனால் நேர்ந்த கடன்களைத்

தீர்க்கும்படியான முயற்சியைச் செய்துவந்தானென்றும், கடனடைப்பது அசாத்தியமெனத்தோன்றி அதனுற்சிந்தை அதிகரித்துக் கடைசியில் அவன் மரணத்துக்கு ஏதுவாய் முடிந்ததென்றும் தெரியவந்தது.

இச்சமாசாரம் மற்றைச் செட்டிகளுக்குத் தெரியவர, அவர்கள் ஹிரண்மயியினிடம்வந்து, 'உன்தந்தை எங்களுக்குக் கடன்காரனுய் மரித்துவிட்டான், எங்கள்கடன்களைத் தீர்க்கவேண்டும்' எனக் கேட்டார்கள். ஹிரண்மயிவிசாரிக்கையில் அவர்கள் கூறியது உண்மையென்று தெரியவந்ததன் மேல், தன் யாவத்சொத்தையும் விக்ரயித்து, தகப்பன்பட்டகடனை யெல்லாம் தீர்த்தான். குடியிருந்த வீடுகூடக் கடன்கொடுத்தவர்களின் சுவாதீனமாய்விட்டது. பின்னர் ஹிரண்மயி அன்ன வஸ்திரங்களுக்குக் கூட வழியில்லாமற் பட்டணத்திற்கு வெளியில் ஒரு விடுதியில் தனிமையாய் வாசம்செய்துவந்தாள். அவளுக்குப் பரமோபகாரம் செய்யத் தகுந்தவர் ஆநந்த ஸ்வாமி; அவர் தூரதேசத்தில் இருந்தார். அவரிருக்கும் இடத்திற்கு அழைத்துக் கொண்டுபோர்வார்கள் ஒருவருமில்லை.

## ஐந்தாம் அத்தியாயம்.

ஹிரண்மயி யௌவனமும் எழிலும் வாய்க்கப்பபெற்றிருந்தனள். ஒரு வீட்டில் யாதொரு சகாயமுமில்லாமல் ஒருத்தியாய் இருப்பது சரியாயிருக்கவில்லை. அதனுல் அபாய முண்டாகும். களங்கத்திற்குக் காரணமாகும். அவளிருந்த வீட்டுக்குப் பக்கத்துவீட்டில் அமலை என்பவள் வாசம்செய்தாள். அவள் விதவை; அவளுக்கு ஒரு சிறுபிள்ளையும் நாலைந்து பெண் குழந்தைகளும் இருந்தன. அமலைக்கு யௌவன காலம் கழிந்தது. நல்ல நெறியுள்ளவளென்று பெயரெடுத்திருந்தாள். ஹிரண்மயி இரவில் அவள் வீட்டுக்குப் போய்ப் படுத்துக்கொண்டிருந்தாள்.

ஒருநாள் ஹிரண்மயி அமலை வீட்டுக்குப் படுத்துக்கொள்ளும் பொருட்டுப்போன பொழுது, அமலை, புரந்தர செட்டி ஊரை விட்டுப்போய் எட்டு வருஷம் கழிந்த பிறகு திரும்பி வந்திருக்கின்றுன் என ஊரில் ஜனங்கள் பேசிக்கொள்ளுகிறுர்களென்று கூறினுள். அப்பொழுது அதை கேட்டுக்கொண்டிருந்த ஹிரண்மயிக்குக் கண்ணீர் ஆருய்ப்பெருகிற்று. அமலைக்கு இது தெரியவில்லை. இந்த வையகத்தில் அவளுக்கு மிகுந்திருந்த கடைசி சம்பந்தமும் அற்றுப்போயிற்று. புரந்தரன் அவளை மறந்து போனுன். அப்படி மறவாமல் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருந்த பட்சத்தில் மறுபடியும் திரும்பி வருவதற்கு இடமிராது. புரந்தரன் இப்பொழுது மறந்திருந்தால் நஷ்டம் எவ்வளவோ, ஞாபகம்வைத்திருந்தாலும் லாபம் அவ்வளவே; அவளுக்கு என்ன பயன்? ஆனுல் எவனுடைய நட்பை எப்பொழுதும் மனதின்கண் நிறுத்தி ஞாபகத்துக்குக் கொணர்ந்து நித்தியமும் காலத்தைக் கழித்தனளோ, அத்தகையவன் தன்னை மறந்தானே எனக்கருதி அதனுல்

மனோவியாகுல மடைந்தனள். ஹிரண்மயி ஒரு முறையேனும் மறந்தனளல்லள். என் நிமித்தம் இது காறும் தூரதேசத்தில் இருந்தாயிற்று. அன்றியும் அவரது தந்தையும் பரலோகமடைந்தனன். இனியும் ஊருக்கு வாராமல் எங்கேபோவது ? என்று ஒருசமயம் யோசித்துக்கொள்வதும், மற்றொருசமயம், நான் விபசாரதோஷத்துக்கு உட்பட்டுவிட்டேன். அல்லாக்கால், புரந்தரனது ஞாபகம் ஏன் வந்துகொண்டிருக்கின்றது? என்று தன்னைத்தானே திரஸ்கரித்துக் கொள்வதுமாயிருந்தாள்.

அமலே.—புரந்தரன் என்பவனது ஞாபகம் உனக்குவரவில்லையா? புரந்தரன், இப்பொழுது சிலமாசங்களுக்குமுன் காலதர்மமடைந்த சசீசூதசெட்டியின் மகனல்லனோ ? என்றாள்.

ஹிரண்மயி.— ஆமாம், தெரியும்.

அமலே.—அவனே இப்பொழுது மீண்டும் திரும்பிவந்திருக்கின்றவன். எத்தனையோ கப்பல்களின்மேல் எவ்வளவோ பொருள் ஈட்டிக்கொண்டு வந்திருக்கின்றான். கணக்கிடத்திறமன்று. அவ்வளவு செல்வம் இந்த நம்தாமிரலிப்த நகரத்தில் எப்பொழுதும் எவரும் கண்டதில்லை.

ஹிரண்மயியின் தேகத்தில் இரத்தவேகம் அதிகமாயிற்று, தன்வறுமையை மனதில் நினைத்தாள் பூர்வஸ்திதியையும் ஞாபகப்படுத்திக் கொண்டாள். வறுமையின் ஜ்வாலை அதிமகத்தான ஜ்வாலை; அந்த ஜ்வாலைக்கு இவ்வளவற்ற செல்வம்அவளுக்குக் கிடைக்குமேல் எவ்வளவோ மேலாயிருக்குமல்லவா ? இப்படியோசித்துக்கொண்டிருந்தால் யாருக்காயினும்இரத்தவேகம் அதிகரிக்காமலிருக்குமா? அப்படி யாகாமலிருப்பதுஅரிவையர்களுக்குள்மிகவு மரிது. ஹிரண்மயி சிலநிமிஷங்கள் அப்படியே மறந்திருந்தவள் போலிருந்து பிறகு வேறு விஷயத்தைப் பற்றி பிரஸ்தாபிக்கலானாள்; கடைசியில் நித்திரைக்குப் போகும் சமயத்தில், அமலா, அந்தச் செட்டியின் மகனுக்குக் கல்யாணமாயிருக்கின்றதா, என வினவினாள். அமலே, இல்லை, இன்னும் கலியாணமேயில்லையாம் என்று மொழிந்தாள்.

ஹிரண்மயியின் உடம்பு சிலிர்த்தது. அன்றிரவு மற்றொன்றும் பேச்சு நடக்கவில்லை.

(இன்னும் வரும்.)

தி. அ. ஸ்வாமிநாத ஐயர்.

---

# வாழ்க்கைப்பயன்.

---

## I-பெருவழக்கு

[303-ஆம் பக்கத்தொடர்ச்சி.]

டேகார்டே என்பவர் சாமானிய உலகவாழ்க்கைக்கு வேண்டித் தாம் எடுத்துக்காட்டிய விதிகளை நான்கு பழமொழிகளிற் செறித்துக் கூறுகின்றார். அவையாவன :—(1) தான்தோன்றிவளர்ந்த சமூகத்தில் வழங்கும் சட்டங்களுக்கும் சமயக்கோள்களுக்கும் உட்பட்டிருத்தல்வேண்டும் என்பதூஉம், (2) தான் தொழில்புரியவேண்டிய அமயங்களிற் காலதாமதமின்றித் தன் அறிவாலியன்றவளவு செய்தலேயன்றிக் குறைகூறாது விளைந்தபயன்களைப் பொறுத்துக்கொடல் வேண்டும் என்பதூஉம், (3) ஐம்புலவாசைகளைத்தீர்த்துக்கொள்ள முயல்வதனினும் அவற்றையடக்கி யாளுதலில் இன்பங்காண்டல் வேண்டும் என்பதூஉம், (4) மெய்யறிதலையே தன் வாழ்க்கைத் தொழிலாகக் கோடல்வேண்டும் என்பதூஉமாம்.

ஒரு காலத்திற் சனங்களாற் புகழப்பெற்ற தனது யூபியஸ் என்ற புத்தகத்தில் லிலி என்பவர் தாம் சொல்லக்கருதிய புத்திமதிகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறுகின்றார். "யாட்டுக் குட்டி உறங்குழி உறங்கி வானம்பாடி எழுவுழி எழுக. களிப்பு மேவுக ஆனால் அதன்கண் அமைதியுறுக. முகங்கடுத்த லின்றிப் பொறையுடையோனாகுக. தலைதெரியாது மோதுதலின்றித் தைரிய முடையோனாகுக. நீ உடுக்கும் உடைகள் தூயனவாயிருக்கட்டும். நீயுட் கொள்ளு முணவு மிதமிஞ்சி யிருத்தலின்றிச் சுகம் விளைப்பதாயிருக்கட்டும். உனது பொழுது போக்கு அதன்சொல்லாற்றலின்படி நேரிய விளையாட்டிலேயே நிகழட்டும். தக்ககாரண மின்றியொருவனையும் ஐயுறவேண்டாம். ஆராய்ச்சியின்றி யெவனையும் நம்பவேண்டாம். ஒவ்வொருவனது அபிப்பிராயத்தின் படியும் நடக்கத்தக்க எளிமையும் உன் கொள்கைகளின்படியே நடக்க வேண்டு மென்ற விடாப்பிடியும் ஒழிக. கடவுட்குத் தொண்டு செய்தலும் அவரை அஞ்சுதலும் விரும்புதலும் உடையனாகுக. உன் விருப்பத்தின் படியாதல் உன் நண்பரது விருப்பத்தின் படியாதல் கடவுள் உனக்கு நன்மை புரிவார்."

தந்நய மென்றெண்ணுகின்றனவற்றிற் பழிக்கஞ்சாது முயன்று பின்பற்றுதலில் தம்மையும் பிறரையும் ஒருங்கே துன்பத்திற் காளாக்குவோர், தந்நயம் பாராட்டுவோர் தீயோர் இவர்கள் மாத்திரையேயோ? பல தக்கமாந்தரும் பல நன்னூல்களும் மிக்க மேதக்கருத்துக்களை யுட்கொண்டிருந்தும பொதுவாக நோக்குமிடத்து அதுபோலும் பிழையின்கண் வீழ்தலைபாவரும் ஒத்துக்கொள்ளல்வேண்டும். அவர்பாவவாழ்க்கையை யின்பவாழ்க்கையாகவும் அறத்துறையாத்ம பரித்தியாகமாகவும் துறவே சமயமாகவும் வகுத்து

க்காட்டினர். இன்னும் வாழ்க்கையில் ஒவ்வொருநாளும் இனியனவனைத்தும் பிழைப்பட்டனவென்றும் சமயத்தின மெய்யியல்பு வெறுப்பு அருவருப்பு முகமலர்ச்சியின்மை முதலியனவே பென்றும் நம்மைச்சூழ்ந்துள மிகப்பே ரொளிவாய்ந்ததும்இளவெயிலுடையது மாகியஇயற்கைவனப்புத் தீமையே யன்றி நன்மையன் றென்றும் இது புன்மாயையாற் கவர்ந்து கோடற் பொருட்டு வைக்கப்பட்டதோர் வலையாமேயன்றி எல்லாநன்மைக்கும் தலைவனுகிய இறைவன் நமக்குக்கருணைகூர்ந்துதவிய இன்பவூற்றினுள் ஒன்றன்று என்றும் நினைக்குநர்போலக் காணப்படும்பலதக்கோரையும் அறிவேம்.

" துன்ப வழியதுவே துன்பமிலா நல்லுலகின்
இன்பமுற வுய்க்குமென வெண்."

என்ற ஈரழகிய பாவடிகளிற் **கௌபர்** என்பார் நமக்குக் கூறியதுகாண்க.

யாம் துன்பமின்றி வாழ்தலியலாது என்றல் ஒருதலையேயாம். நிழலின்றிவெயிலில்லை. நாம் பெரிதுமன்புபாராட்டுவோரை ஒருதலையாய் இழத்தலாதிய நமது வாழ்க்கையிடையூறுகள்விளைக்கும் துன்டங்களைத்தவிர்த்து இன்னும் பலவகையவான துன்பங்களையு மிடர்ப்பாடுகளையும் எதிர்பார்க்கத்தக்க வளவு இவ்வுலகின்கண் நமதுயிர்வாழ்க்கை பணிறப்பட்டதாகவும் உலகம் இன்னும் இளமை புடையதாகவும் நமது வாழ்க்கைக்கின்றியமையாதனவற்றையும் நம்மைச்சூழ்ந்துள பொருள்வலிகளின் இயல்புகளையும் அறியாதவராகவும் இருத்தல் உற்றுநோக்கற் பாலதே. ஆனல் **கௌபர்** என்பார் துன்பவழி யதுவே துறக்கவழியாம் என்று வாய்ப்பறை யறைகின்றர்." ஆகவே யிவ்வுலகத்திலின்ப வாழ்க்கை இனி யவ்வுலகத்திற் றுன்பம் விளைவிக்கும் என்பது திண்ணமாம். அம்முற்றிலும் தவறுன எண்ணம் பல்கவலையுள்ளோர்க்கு மனக்கவற்சியும் துன்பமும் ஆசங்கையுமாகிய இன்னோரன்ன தீமைகளை விளைத்து விட்டது.

இத்தகைய பெரும்பேற்றிற்குக் கடவுளிடத்து நன்றியறிதலுளராயிருந்து துன்பத்தினுலாதல் அசௌக்கியத்தினுலாதல் தம்மிடத்தில் அவ்வின்பவாக்கங்களே ஊறும் ஊற்றுக்களுடைய ராகாதவர்களது வாழ்க்கை நெறியை விளக்கும் உயர்ந்ததோர் உரிமை கொடுக்கின்றதென்று உணர வேண்டியுமிருக்க, பல நன்மை வாய்ந்த விளைஞர் சுயசிந்தையென்ற மனோவியாதியினுல் வருந்தித்தா மின்பமுடைய ராகின்றமைபற்றித் தம்மையே இடர்ப்படுத்திக் கொண்டிருக்கின்றூர்கள். **கௌபர்** சன்மார்க்க சங்கத்தாரெனப் பெயர் வாய்ந்த குழாத்தைச் சேராதவராயிருந்தும் அவருபதேச மொழிகள் 'கரடிபடிக்தால் அதற்கு நோவுமேஎன்ற கருதாது காண்போருக்கு இன்பமளிக்குமன்றே. ஆதலின் அதுதவறும்' எனக்கூறுவோரென்று மேகாலே யென்பவராற் புனையப்பட்டவரது எண்ணத்தாற் சிறிது கறைபட்டனவாமன்றே ?

வாழ்க்கையில் தாமறியாதவைகளைப்பற்றி மக்களுட் பலர் தம்மையே வருத்தித் துயருறுத்திக் கொள்கின்றனர். ஆயினும் "நல்லனுமறிஞனும் சிற்சில சமயங்களில் உலகத்தொடு வெகுண்டும் சிற்சில சமயங்களில் அது சண்டிரங்கியும் இருப்பார். ஆனால் தனது கடமையைச் செய்தவனொருவனும் உலகத்தை வெறுத்துத் திருப்தியடையா திருக்கவில்லை." 1

"நலமுடையா னீசனென நண்ணியறிந் தானே
யுலகொழுங்கி னுண்மையுணர்ந் தோன்."

தன்னைச் செய்தலால் முன்னையினுமதிகமாக நம்மையின்பகரமாக்காத கடமையும் மருந்தில் வேட்கையு மில்லையென்று சேனிகா கூறுகின்றார்.

"தன்றொழின் முடித்து நின்றாள் தையலா ளியற்கை தானும்
நின்றொழின் முடித்து நிற்பாய் நீபவட் பழித்த னீத்தே."

என்று மில்டன் என்பார் கூறுதலுங்காண்க.

நம்மைப் படைத்தோன் இயற்கையின்பத்தை நாம் முற்றிலும் நுகர வேண்டுமெனக் கருகாவிடில் அவையனைத்தும் கண்ணுக்குப் பேரழகுடையனவாகவும் செவியினுக் கின்னிசையனவாகவும் செய்திரான். தன்னையே நன்கு அடக்கியாளுவதனால் ஒருவன் ஏனையோர்க்கு எவ்வளவு அமைதியை விளைக்கின்றான் என்பதனையும் தனக்கே எவ்வகை இன்பம் விளைத்துக் கொள்கின்றான் என்பதனையும் அளவிட்டுரைத்தலரிதாம்.

யான் பலவாற்றானும் பெரும்பாலும் நினைக்குமாறு இக்காலம் மிக அற்புதமாகவும் இனியதாகவும் அறிவொளியுற்றதாகவு மிருந்தால்அது நமது அதிர்ஷ்டமே யன்றி நம்மாலாகிய செய்கையன்று. அது பற்றி யாம் செருக்குறுதலின்றி யிறைவனை வந்திக்கற்பாலம்.

ஆயினும் யாம் நன்றியறித லுடையோமாயிருந்து வாழ்க்கையின் அளவற்ற பெறற்கரும்பேறுகளை முழுதும் நுகரவேண்டியிருந்தும் துன்பங்களாதல் கவற்சிகளாதலின்றி யிருததலியலாது. வாழ்க்கை யென்பது வால்போல் என்பவரால் நினைக்குநர்க்கு இன்பமுடிவுடை நாடகமும் உணருநர்க்குத் துன்பமுடிவுடை நாடகமுமாகப் புனையப்பட்டுளது. யோசிக்கு மிடத்துச் சிலவேளைகளில் அது துன்ப முடிவுடை நாடகமாக விருக்கின்றதெனினும் பெரும்பாலும்இன்ப முடிவுடைநாடகமே. ஆனால் அதுநம்விருப்பதைச் சார்ந்ததே யன்றி வேறன்று. "வாழ்வினும் சாவினும் நல்லோர்க்குத்தீமை நிகழாது" என்றார் சாக்ரடீஸ் என்பவரும். உண்மையாகவே துன்பமெடுத்துரை நிமித்திகர் கூற்றினும் இன்ப மெதிர்பார்க்கு நிமித்திகர் கூற்றே நேர்மையுடைத்தாகின்றது. துன்பத்தையாதல் வருத்தத்தையாதல் நாம்நுகராநிற்கு மோவ்வொரு கணத்தையும் எண்ணுந்தோறும் இன்பம் நுகர்ந்த பல்லாண்டுகளையும் கவனியாது விடுக்கின்றோம்.

நாம் எப்பொழுதும் நந்தம் முயற்சிகள் கைகூடுமென்றெதிர் பார்த்தலொண்ணாது. இயற்கையும் சிலவேளைகளிற் றவறுகின்றாள். ஆனால் உன் சௌக்கியத்திலும் க்ஷேமத்திலும் செருக்குற்று உன்னையே உயர்த்திக்கொள்ளாதே. இடுக்கண் வந்துற்றகாலை யின்பம் வாராதென் றெண்ணாதே.

விவிலிய நூலில் ஒருபெயர் போன வாக்கியம் 'அழிவிற்குச் செலுத்தும் வாயில் விரிந்தும் வழியகன்று மிருக்கின்றன; ஆண் டெய்துவோர் பலர். நல்வாழ்க்கை வாயில் நேராகவும் வழி ஒடுக்கமாகவு மிருக்கின்றன. அதனைக்காண்போர் சிலர்' என்று நமக்குக் கூறுகின்றது.

ஆனாலிஃதடிக்கடி நேரிய பொருள் காணப்படாது நிற்கின்ற தென் றெண்ணுகின்றேன். நேரிய வழிகுறுகியும் காணற்கரிதாகியு மிருக்கின்ற தெனக் கூறப்பட்டிருக்கின்றதே யன்றிக் கரடுமுரடாகவும் வருத்தம் கொடுக்கத்தக்கதாகவு மிருக்கின்ற தெனக் கூறப்பட்டிலது. எல்லாப்பக்கங்களிலும் பிரிந்து போகின்ற சிறுவழிகளுள்ள ஒரே நேரியவழியுள தென்பதற்கோரையப்பாடுமில்லை. கடலிலுள்ளதோர் நாவாய்க்கு ஒரே உண்மைவழியுண்டு. திசைகாட்டுங் கருவியின் மற்றைப்பங்களனைத்தும் அஃதிருக்கவேண்டிய பட்டினத்தினின்றும் விலக்கிவிடும். ஆனால் உண்மைவழி மற்றையவற்றினும் கரடுமுரடாகவாதல் புயற்காற்றுடையதாகவாத லிருக்கின்ற தென்பதுபோதராது.

தவறுடையனவும் அறிவில்லனவும் ஆவன அடிக்கடிமிக்க இன்பமுடையனவும் சிலவேளைகளில் அக்கணமளவிற் களிப்புறுத்துவனவுமா மென்பதை மறுத்தலியலாது. அங்ஙனஞ்செய்த லசங்கதமாம். அது தீமைக்குக் கவருமியல்புண்டென்பதையே யாசங்கித்தலாகும். யான்காட்ட விரும்புவதெல்லாம் இத்தகைய வேட்கைகட் கிடங்கொடுத்தலான் இனி வரக்கடவ துன்பத்தைக் கொடுத்துக் கணப்பொழுதே நிகழவல்ல வின்பத்தினை விலைக்கு வாங்கிக்கொள்கின்றோம் என்பதும் ஒத்துநோக்கு மிடத்து மிகச்சிறியலாபத்தின் பொருட்டு மிகவுமதிகமா யிழக்கின்றோமென்பதும் நம்பிறப்புரிமையை ஈசாவைப்போல ஒருவேளைக் கூழுக்காகவிற்றுப் பிற்காலத்துக் கழிவிரக்கத்தினால் ஒருமணி நேரம் களிப்புடைய பயித்தியத்தை வாங்குகின்றோம் என்பதுமேயாம். உண்மை வழியால் நோக்குமிடத்து யாமின்ப முடையராயிருக்க விரும்பினால் நன்மை வாய்ந்தோமாயிருக்க வேண்டும் என்று இவ் வாழ்க்கையைப் பற்றியே கூறுகின்றேன். தற்சீராட்டினும் தன்னயத்துறவினாலதிக வின்பம் விளையும்.

சுகமு மின்பமு மொருகாலு மொருங்கு செல்லா. நமக்குத் தோன்றுகின்றபடி தம்மை யின்பமுடையராக்கிக் கொள்வதற்கு வேண்டியன வனைத்தையு முடைய பலர் பரிதபிக்கத்தக்க நிலையிலிருக்கின்றார்கள். அதிர்ஷ்

டம் நமக்கு அதிகமாகத்தரக் கூடும். ஆனால் அவ்வதிகத்தைப்போதிய வள வினதாக ஆக்கிக்கொள்வது நமது மனமே.

"எம்மன மேயெமக் கினிய ராச்சிய
மிம்மையி னின்பெலா மிதன்கட் காண்கின்றேம்"

**வாவனர்ஜியூஸ்** என்பவர் "பொருளும் பதவியும் கௌரவமும் எல்லோராலும் பெறுதலியலாது. ஆனால் ஒவ்வொருவனும் நன்மையு மளூரு மறிவுமுடையோனா யிருத்தலியலும்" என்று கூறினர். உண்மைச் செல்வம் நம்முடைமையைச் சர்ந்ததன்று; நம்மியல்பைச்சார்ந்ததேயாம். நாம் நுகரும் பயன்கள் அவ்வவற்றிற்குத் தக்கவாறு நம்மை உத்தரவாதிகளுமாக் குகின்றன.

**கிரிசாஸ்டம்** துறவி "சற்காலநிலை நாடகக்காட்சியேயாம்; மனிதன் ஜெழில் அதன் கண் ஓராட்டமாம். செல்வமும் வறுமையும் ஆளுவோரும் ஆளப்படுவோரு மின்னபிறவும் வெவ்வேறு நாடக பாத்திரங்கள். ஆனலிற்றை நாட்கழிந்துவிடின் நாடகசாலை யடைக்கப்படும்; வேஷங்கள் களையப்படும்; பிறகு ஒவ்வொருவனும் அவனது தொழில்களுமாராயப்படும். ஒவ்வொருவனுமவன் செல்வமுமல்ல; ஒவ்வொருவனும் அவன் உத்திபோகமுமல்ல. ஒவ்வொருவனுமவன் பதவியுமல்ல; ஒவ்வொருவனுமவன் வலியுமல்ல; ஆனல் ஒவ்வொருவனு மவன்றெழில்களுமே யாராயப்படுவனவாம். நந்தொழில்களெல்லாம் ஆராய்ச்சிக்காலத்து நிலைநிற்கு மென்று நம்பி நடப்பாம்.

அவ்வாராய்ச்சியாதாகலாம்? எவ்வளவு செய்துளோ மென்பதன்று; எவ்வளவு செய்ய முயன்றுளோ மென்பதேயாம். வாழ்க்கையின்கண் வென்றி பெற்றேமோ என்பதன்று வென்றி பெறுதற்குரியோமா என்பதே.

"பிறர்மனப் படிகுற் றேவல் பேணிச்செய் கலனே யிம்மைப்
பிறவியொன் றுற்றுக் கற்றேன் பேசரு மின்ப முற்றே
னறம்வழு வாத வெண்ண மவனணி கவச மாகுங்
கறையறு வாய்மை யன்னேன் கருசரு வன்மை யாகும்,"

உண்மையாகவே மெய்யான இன்ப வாழ்க்கை அறிவறங்களோடு கூடிய வாழ்க்கையேயாமன்றித் தீமையும் தற்சீராட்டு முள்ளதன்று. பாவமே மெய்யான தற்கொலையாம். "என் மைந்தனே என் சட்டத்தை மறவாதே; என் கட்டளைகளை நின்மனத்தின் கட்போற்றிக் கொள்வாய்; ஏனெனிலவையனைத்தும் உனக்கு நீடித்த வாழ்க்கையையும் அமைதிப்பையு மளிப்பனவாம்" என்றார் சாலமனும்.

பெருவழக்கு முற்றிற்று.

சருக்கை - வரதாசாரியன்.

# திருப்பரங்கிரிக் குமரன் தாலாட்டு.

காப்பு.

சேலாட்டும் பண்ணைத் திருப்பரங்கி ரிக்குகன்றன்
ருலாட்டுக் கைந்துகரத் தந்திமலர்த் தான்பணிவாம்.

1. பூமேவும் வேதன் பொறிமார் பகன்சொலரன்
றாமேவு நன்னுதற்கட் டோன்றுஞ் சுடருருவோ.

2. சீர்சேர் சுடர்ப்பொறியைச் செஞ்சுடரோன் கையேந்தி
வார்சரவ ணத்தடத்தே வைக்க வளர்ந்தவனே.

3. சிவனும்வெண் ணீறிலங்கச் சேர்திலக நெற்றித்
தவள மதிநிகர்பூந் தண்முகமோ ராருனே.

4. மூவலிலா வாறு முகமலர வோராறு
பாவையர்பா லூட்டவுண்ட பண்ணினிய வாயானே.

5. பெற்றோர்கற் றோர்க்குப் பெருங்கருணை காட்டியன்பு
முற்றோங்க மேவுமியன் முந்நான்கு கண்ணனே.

6. எண்டருசீர் முத்தமிழி னின்சுவையைக் கொண்டருளுங்
குண்டலஞ்சே ரீராறு கோலவள்ளைக் காதானே.

7. செயிர்தீர்மா ணிக்கமணி சேரைம் படையாம்
வயிரமணித் தார்துலங்கும் வண்ணமணி மார்பானே.

8. மாலெனுமம் மானும்பொன் மானுங்கண் டுண்மகிழப்
ப்பாலவிளை யாடல்செயும் பன்னிருகைப் பெம்மானே.

9. தும்பி முகன்புகழச் சோதிநவ ரத்நமணிச்
செம்பொற்றண் டைகலிக்குஞ் செந்தளிர்ப்ப தாம்புயனே.

10. தவநா ரதர்முனஞ்செய் தக்கமகந் தோன்று
நவமார் தகரிவர்ந்து ஞாலம்வலம் வந்தவனே.

11. உள்ளத்தன் பார வுமையாள் களபமுலை
வள்ளத் தமுதுதர வாங்கியுண்ட காங்கெயனே.

12. காவின்மணிக் கிண்கிணிகள் கல்லெனநன் கோலமிட
வேலு மரன்றனெண்டோ ளேறிவிளை யாடுமன்னே.

13. விந்தையுறும் வேதன் மெலியச் சிறையிலிட்டுத்
தந்தைக்கோங் காரவுரை சாற்றுங் குருபரனே.

14. வேத நெறிதழைக்க வேதாக மஞ்செழிக்கப்
போதகஞ்செய் தோங்குபரி பூரணக்ரு பாநிதியோ.

15. மூத்தேவர் விண்ணோர் முனிவரரெங் நாட்டவரு
மெய்த்தேவ வென்றுநிதம் வேண்டுஞ் சிகாமணியோ.

16. நாலா ரணம்பரவு நாரா யணியளித்த
வேலா யுதமேந்தும் வீரப்ர தாபமன்னே.

17. கோங்கவிழ்ம லர்க்குழலார் கூர்நயன வண்டுகள்பாய்
செங்கடப்பந் தாரிலங்குஞ் சீர்சேர் புயாசலனே.

18. கார்த்திகே யப்பேர்கொள் காவலநீ காத்திடெனச்
சீர்த்தியுறு மந்தணர்கள் சேவிக்கும் வான்பொருளோ.

19. இச்சைமிகப் பச்சைமயி லேறியொரு மாங்கனிக்கா
யுச்சிதமா யோடி யுலகைவலம் வந்தவனே.

20. ஆலமர்ந்த நால்வோர்க் கவிர்மெய்ந் நிலைகாட்டு
மேலவர்க்கு மேலாய் விளங்குங் குருமணியோ.

21. கண்மணியோ மேலாக் கருதும் பணிமணியோ
விண்மணியோ போகியரும் வேண்டுஞ்சிந் தாமணியோ.

22. முக்கனியோ தேனோ முதிர்தீஞ் சுவையமுதோ
தக்கவர்க ளேத்துஞ் சடாட்சரத்தின் வான்பொருளோ.

23. தத்துவப்பூங் கொத்தோ சத்தர்நிதம் போற்றுசித்தோ
கத்தர்வேய் முக்தர்குளக் கண்ணுதித்த வாணிமுத்தோ.

24. பண்ணேரு மின்பப் பயனே நிராமயனே
விண்ணோர் கருதுமண வெட்சியணி யும்புயனே.

25. வானையளா வும்பொதிகை மாமுனிவ னுள்ளமிசை
ஞானவொளி வீசு நலமா மணிவிளக்கோ.

26. சொற்பரங்கி ரிப்பழனி சோலைமலை யேரகஞ்செந்
திற்பதிகுன் றுடலெனுஞ் சீர்த்தலமே வும்பரனே.

27. சீர்வதியுஞ் செம்பொற் சிலையுதித்த பைந்தொடியா
ளேர்வதியு முத்தமிட்டேந் தின்பக் களஞ்சியமோ.

28. எண்ணியபோ தெல்லா மெதிர்தோன்றி வாழ்வுமிக
நண்ணும் படிவரங்க ணல்குந் தயாநிதியோ.

29. பத்தர்செய்த குற்றங்கள் பாரா துளம்பொறுத்துச்
சித்தியளித் தாளுஞ் சிவஞான தேசிகனே.

30. ஏயுமடி யேன்ற னிடர்தீர்த்தென் சித்தமுமோர்
கோயிலென வுள்ளத்திற் கொண்டுறைசி வக்கொழுந்தோ.

31. அக்ரமச் சூரபத்ம னாதி யசுரரற்
விக்ரமங்காட் டென்னவரி வேண்டுமுப ராண்டகையோ.

32. நவவீர மேவசுரர் தம்மொ டமர்செய்ய
நவவீரர் சூழநடு நாயகமா நின்றவனே.

33. வானோர்சு ரேசனொடு வானவரும் வந்திறைஞ்சச்
சேனா பதியாகிச் சேர்ந்தமர்செய் சேவகனே.

34. வீரமிகு தாருகனோர் வெற்பாகக் கண்டுவைவேல்
சோரமற விட்டுத் தொளைத்துவெற்றி கொண்டவனே.

35. ஆயிரத்தெட் டண்டங்க ளாண்டவிறற் சூரபன்மன்
சாயக்கூ றிட்ட சமரவடி வேற்கரனே.

36. சூரா தியரொழியத் துங்கவடி வேல்விடுத்து
வீராதி வீரனென மெய்ப்பேர்கொள் வித்தகனே.

37. தீயனெனுஞ் சூரபன்மன் சேவன்மயி லாகிநின்று
தூய சரணிறைஞ்சித் தோத்திரிக்கக் காத்தவனே.

38. விசயமிகக் கண்டவண்டர் வேண்டவெள்ளை யானை
யிசையும் பவனிவந்தங் கின்பருளுஞ் செவ்வேளோ.

39. விண்ணரசுங் கற்பமைந்த மென்சசியு மெய்ச்சரிய
பெண்ணரசொண் டெய்வப் பிடியைமணஞ் செய்தவனே.

40. திருமுருகா வென்றொருபெண் சிந்தையிற்சிந் திக்கு
மருமையுணர்ந் தங்கை யளித்தாண்ட பூரணனே.

41. கற்றுணர்நக் கீரன் கவின்முருகாற் றுப்படைநூ
லுற்றமணத் தார்போ லுவந்தருளு மொள்ளொளியோ.

42. மாமன் மருமகனே மன்னன் றிருமகனே
கோமதிப ரங்கிரிவாழ் கோனும் பெருமகனே.

43. பூண்பங் கயப்பதனே பொன்னேற்றுள் றன்சுதனே
மாண்பமைப ரங்கிரிக்கண் வாழும்பா ரங்கதனே.

44. சுகமாரு நற்றவனே தொல்கலைகள் வல்ல
தகுசீர் பரங்குன்றந் தங்குமெங்கள் கொற்றவனே.

45. தொழுஞ்சுரர்சே னாபதியோ சொல்லருஞ்சீர் மேவும்
செழும்பரங்கி ரிக்கட் சிவானந்த வாரிதியோ.

46. வானுறுதெய் வப்பிடிக்கும் வண்குறவர் பொற்கொடிக்குந்
தான மழகளிறே தண்பூங் கொழுகொம்போ.

47. அன்பிற் புகழ்சொ லருணகிரி நாதர்தமக்
கின்பமைநற் பேறளிக்கு மேர்ப்பரங்கி ரிக்கரசோ.

48. வன்பிணிதா ரித்திரம்பேய் மாமலடு கூன்செவிடு
துன்பூமை நீங்கியுய்யத் தூய்வரந்தந் தாள்பரனே.

49. என்னைப் புகழ்ந்துரைக்கும் யாவர்களு மின்பமுற
மன்னுந் திருவருள்செய் வண்பரங்கி ரிக்குகனே.

50. அருள்பரங்கி ரிக்குகன்மு லாட்டைக்கற் றோர்கள்
மருளகன்ஞா னந்திருவும் வாய்ந்துபெரும் பேறுறுவார்.

திருஎவ்வுளூர் - இராமசாமி செட்டி.

---

## பரீட்சை வினாக்கள்.

---

## MADRAS CHRISTIAN COLLEGE.

[Matriculation Class. April 1900]

I. (*a*) **பெருந்தேவனார் பாரதம்**:—இந்நூலைத்தவிர்த்துத் தமிழிற் செய்யுளுருவத்திலுள்ள வேறு பாரதங்கள் யாவை? அவற்றிற்கும் இதற்கு முள்ளவேறுபாடென்னை? பெருந்தேவனாரது காலமுஞ் சமயமு மின்ன வெனக்காட்டுக. இவர் பெயரையே தமக்கும் பெயராகக்கொண்டார் வேறு எவ்வெவர்? (*b*) 'உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுள்' என்றுலென்னை? இந்நூலைப் 'பாரதவெண்பா' வென்றலும் 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' என்றலும் தம்முண்முரணுவோ? விளக்கி விடை யெழுதுக. இந்நூலாசிரியரது செய்யுணடையைப்பற்றிச் சுருக்கி யெழுதுக.

II. i. 'போர்வீரர் தம்மோடும் போந்தரசு கொள்வீரோ' என்று சுத்தவீரராகிய பாண்டவரை நோக்கிக் கண்ணன் கூறுதல் நேரிதோ? விடைக்கு நியாயங்கூறுக. ii. 'வெண்டலைமி லூணுகந்த செல்வன்' இதன்கணுள்ள கதையை ஐந்து வரிக்குள் எழுதி இத்தொடரிலுள்ள சொன்னயமுங் காட்டுக. iii. 'வந்தவாகாண்குமது', 'என்னேடெழுத்தோவிது': இவற்றின்கண் 'அது, என்றும், 'இது' என்றும் சுட்டப்பட்டனயாவை? இவற்றிலுள்ள இலக்கண விசேடங்களென்ன? iv. 'இரு' என்னும் பகுதியடியாகப் பிறந்து நான்கனுருபு பெற்ற இறந்தகாலத் தன்மைப்பன்மை வினையாலணையும் பெயரும், 'போ' என்னும் பகுதியடியாகப்பிறந்து இரண்டனுருபுபெற்ற எதிர்காலத்தன்மை யொருமை வினையாலணையும் பெயரு மெழுதுக.

III. (*a*) குறிப்புரையெழுதுக:—(1) பெற்றத்தனிமுரசம் (2) அதிரதர் (3) சாதாரணஞ் செய்யுஞ் சாதேவன் (4) அரிவை (5) தற்பரம் (6) குருநாடு (7) தொளைநிரை (8) காங்கேயன். (*b*) மேதினி, ஐயன், உயிர், மாயோன், காசினி, குடை, அச்சுதன், முனிவர், தண்டலை, கண்டகன், கடல், உறி: இவற்றிற்குப் பகுதிப்பொருள் கூறுக. (*c*) இடக்கரடக்கல், மங்கலம்; அஃறிணையியற்பெயர், சாதி யொருமைப்பெயர்; ஏவல்வினை, முன்னிலை வினை; முதல் வேற்றுமைக் கருத்தா, மூன்றும் வேற்றுமைக் கருத்தா இவை தம்முள் வேறுபாடென்ன? (*d*) இடுகுறியாக்கம், இலக்

கணே, காரகம், மெய்யீற்றுடம்படுமெய், வேற்றுமையக்கம் : இவையிற்றை யுதாரண முகத்தான் விளக்குக.

IV. (1) பாஞ்சாலி பட்டவடியாது? அஃதெவ்வாறு வருணிக்கப்பட்டுளது? அங்ஙனம் வருணித்தல் எவ்வணியின் பாற்படும்? (2) மாலவன், நாகணே, கோயில், பெருமாள்: இச்சொற்களுக்கு இலக்கணக்குறிப் பெழுதுக. (3) சூழ்சபை, பொருபடை, கழறெழுது, பாழ்ங்கிணறு : இவற்றிற்குப் புணர்ச்சிவிதி யெழுதுக. (4) சூள், பாழி, நாப்பண், முசலம் : இவற்றிற்குப் பொருள்கூறுக. (5) வாகுவலயம், குணத்தொனி, அர்த்த சந்திர பாணம் : இவற்றிற்குத் தக்க தமிழ்சொற்றொடர்கள் வரைக.

V. (a) இனி வருவனவற்றை யினிது விளக்கி ஆங்காங்கு வினவிய வினுக்கட்குந்தக்க விடைபகர்க.

(1) "ஆமளவு நட்புகந்தா லன்றுகி னின்றதே
தேமருவு தாரோய் செரு."

(2) "பெண்டுகளும் பிள்ளைகளும் பித்தர்களு மென்னறிவார்"
இஃதென்னவணி? இது யார் யாருக்கெப்பொழுதெதுகருதிக்கூறியது?

(3) "மாணுத மாமலர்த்தாண் மால்."
இதன்கணுள்ள யாப்புவிசேடமென்னே? இத்தகைய யாப்புவிசேடம் அமைந்துள செய்யுளடிகள் வேறு மூன்று காட்டுக.

(4) "பொய்வீ, டினிதுசெய்யும் பாண்டவர்."

(b) 'என்னவரசாள்கையிது' என்று வீமன் வெறுத்துக் கூறிய வழித் தருமன்கூறிய விடைபொதிபாடலேயும், கண்ணன் விதுரன் வீடணேந்தபோது விதுரன் புகழ்ந்துகூறிய பாடலேயு மெடுத்தெழுதுக.

VI. i. "இருளே கேண்மோ வருளே கேண்மோ, பெற்றமூர்ந்த கற்றைச்சடையனேச், சற்று நோக்கினேன் றள்ளே தகைத்தனள், பாழியிற் பாய்கோ பணிவரை யுருள்கோ" : இச்செய்யுளின்கணுள்ள திசைச்சொற்களே யெடுத்தெழுதி அவை யின்னின்னநாட்டுத் திசைச்சொற்களென்றுங் கூறுக. ii. "ஆற்றுவரேற் றேள்வலிபாற் கொள்வதுவுமாற்றுரேற், றேற்பதுவும் வேந்தர்க்குச் சொல்லியதே" ஈண்டு ஒருமைப்பயனிலே கொடுத்தன்மைக்குத் தக்க நியாயமென்ன? iii. தொழிற்பெயர் எவ்வெப்பொருள்களில் வரும்? வகைக்கோருதாரணங்காட்டி வரைக. iv. 'ஆல், ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளிலும், ஒடு ஓடு உருபுகள் கருவிப்பொருளிலும் ஒரோவிடத்து அருகிவரும்': இக்கூற்றைத்தக்க வுதாரணங்காட்டி நிறுவுக.

VII. நிமிச்சக்ரவர்த்தி கதையைச்சுருக்கி யொருபக்கத்திற்குக் குறையாமற் செவ்விய தமிழ் நடையிலொரு வியாசமெழுதுக; இக்கதையாலறியத்தக்க நீதியையுமெடுத்துக்காட்டுக.

## சமாசாரக்குறிப்புக்கள்.

**இராஜாங்கவிஷயத்திற் றலையிடாமை:**—சில மாதங்களுக்கு முன்னர்க் கல்வி இலாகாவைப்பற்றிய விதிகளடங்கிய புத்தகத்திற் கலைச்சாலைகளிலும் பள்ளிக்கூடங்களிலுமுள்ள போதகாசிரியரனைவரும் எக்காலத்திலும் எந்தக் காரணத்தை யுத்தேசித்தும் இராசாங்க விஷயத்தைப்பற்றி மாணாக்கரிடத்தாதல் நண்பர்களிடத்தாதல் பேசக்கூடாது ; அத்தகைய விஷயங்கள் பேசப்படும்சபைகளுக்குஞ் செல்லக்கூடாது. அன்றி அவற்றினிடத்துத்தாங்கள் தலையிடுவாரேல் அவர்களை யாதரித்துவரும் கலைச்சாலைத் தலைவர்களால் அவர்கள் தத்த முத்தியோகத்தினின்றும் நீக்கப்படுவரென்று புதிதாக ஒருவிதி காணப்பட்டது. அது கண்ட பலதக்கோரும் இவ்விதியாற்றங்களுக்கும் பிறருக்கும் நேரிடக்கடவ பல்வித இடர்ப்பாடுகளையு மெடுத்துரைத்துக் கனம்பொருந்திய துரைத்தனத்தாரவர்களிடம் முறையிட்டுக்கொண்டார்கள். துரைத்தனத்தாரும் அம்முறைப்பாட்டைச் செவியிலேற்றுச் சிறிது கடைக்கணித்தனர். அஃதாவது போதகாசிரியர்கள் இராசாங்க விஷயத்தைப்பற்றிப் பேசுங் குழாங்களிற் சென்றாலும் அங்கே தாமொன்றும் எழுந்து பேசி ஆரவாரஞ் செய்யாது வாய்வாளாதிருக்க வேண்டு மென்பதே. இது நிற்க நிகழும் ஏப்பிரல் மாதம் முதற்றேதி யன்று போந்த செஜட்டில் இராசாங்க விஷயங்களிற் கலைபயிலும் மாணாக்கரும் தலையிடுதல் தவிர்வாராக; அன்றி மீறி நடப்பாரேல் அவர்கள் கலைச்சாலையினின்றும் நீக்கப்படுவாரென்றதோர் புதுவிதியும் காணப்படுகிறது.

***

**மாணாக்கராற்றுப்படை:**—இது கும்பகோணத்தின்கணுள்ள 'டவுன் ஹைஸ்கூல்' என்னும் நாகரிக ஆங்கிலேய வித்தியாசாலையைப்பற்றியதோர் புகழ்ச்சிக்கவியாம். (இது) 335-அடிகளுள்ள நேரிசையாசிரியப்பாவினியன்றுளது. இதனை யியற்றினர் அவ்வித்தியாசாலையின் கண்ணேயே தமிழ்ப்புலமை நடாத்திவரும் பின்னத்தூர்-பிரமஸ்ரீ-அ. நாராயணசாமி ஐயரென்பார். இவர் சிறந்த கல்விமான் என்பதும் சங்கச்செய்யுட்களிற் சென்று பருகியெழுந்து கவிமழை பொழியும் காள்மேகம் போல்வாரென்பதும் இந்நூலைப்படிப்போர் யாவர்க்குமினிது விளங்கும். இதே அபிப்பிராயம் ஆண்டுக் குடந்தையம்பதியிற் றுரைத்தனக் கலாசாலையில் தமிழ் புலமை நடத்தும் புலவர் பெருமான் பிரமஸ்ரீ. உ. வே. சாமிநாத ஐயரவர்கள் சிறப்புப்பாயிரத்தானும் வலியுறுகின்றது. இது நிற்க. இந்நூலின்கண் கல்வி பயிலக்கருதி வேணவாவுற்று அதற்கு நேரியவழி காணப்பெறாது வறுமைபால் ஏக்கமெய்தி மனங்கவலும் மாணாக்கனொருவனைக் கலைநலஞ்சான்று மேம்பட்டு அது காரணமாகத் துரைத்தனத்தாரால் சிறப்புப்பட்டங்கள் அளிக்கப்பெற்று உயரியதோர் அதிகாரமுமெய்தி நின்றானொருவன் ஆற்றுப்படுத்துமாறுகாண்க. இதிற் குடந்தைமாநகரின் வர்ணனைகளும் மேற்கூறிய வித்தியாசாலைச் சிறப்புக்களும் இவைபோல்வன பிறவும் காணப்படும். இந்நூல் பண்டிதரனைவராலும் பெரிதும் பாராட்டத்தக்க தொன்றாம். இதன்கட் புதிய ஆங்கிலக்கருத்துக்களுந் தக்கவாறமைக்கப்பட்டிருக்குந் தன்மை யாவரும் நனகு மதிக்கத்தக்கதே.